# தமிழீழ எழுச்சிப் பாடல்கள்




வெளியீட்டுப் பிரிவு

தமிழீழ விடுதலைப் புலிகள்

# பாடல்களுக்கு முன்.....

இந்தத் தமிழீழ எழுச்சிப் பாடல்கள் தமிழினக் கலைஞர்களின் கூட்டு முயற்சி. இப் பாடல்களை எழுதியவர்களில் பலர் தமிழீழக் கவிஞர்கள். இப் பாடல்களைப் பாடியவர்களில் பலர் தமிழகக் கலைஞர்கள். இவர்களில் எமது தாயகத்தையும், எமது போராட்டத்தையும் ஆதரித்து, களத்தில் நிற்கும் ஒரு வீரனைப்போல பாடல்களைப் பாடிய, பெருமைக்குரிய தேனிசை செல்லப்பா அவர்கள் பிரதானமானவர்.

"நம்புங்கள் தமிழீழம் நாளை பிறக்கும் நாட்டின் அடிமை விலங்கு தெறிக்கும்..." என்று பாடாத வாய்கள் இன்று தமிழீழத்தில் இல்லை. எதிரியின் தோள்களின் மேல் ஏறி நின்றபோதும், "இந்தமண் எங்களின் சொந்த மண்" என்று பாடினான் ஐந்து வயதுப் பாலகன். கிணற்றுக்குள் தவறி விழுந்து— மயக்க நிலையில் மருத்துவமனைக்கு – எடுத்துச்செல்லும்போதும், "எதிரிகளின் பாசறையைத் தேடிப்போகிறேன்..." என்று பாடியபடியே இறந்து போனான் பன்னிரண்டு வயதுப் பையன். தேசபக்தியை, வீர உணர்வை இளநெஞ்சங்களில் ஊட்டிவிட்டது, இந்தப்பாடல்களுக்கு கிடைத்த வெற்றி.

காலம் காலமாக எமது உரிமைகள் பறிக்கப்பட்ட சரித்திரத்தை, மறுக்கப்பட்ட தனது அரசியல் தன்னாட்சி உரிமைக்காக எமது

இனம் நடாத்திய சுதந்திரப் போரின் வர லாற்றை, இந்தப் போரில் எமது மக்கள் சந் தித்த துயரங்களின் வேதனைகளை, தாயகத் தின் விடுதலைக்காக எம்மினத்தின் சந்ததி ஒன்று புரிந்துவிட்ட அர்ப்பணிப்புகளின் உன் னதத்தை எடுத்தியம்புகின்றன இந்தப் பாடல் கள்.

எமது போராட்டத்தை ஒடுக்கி எமது இனத்தை அழித்து, எமது மண்ணை அப கரித்துவிட முனையும் ஆதிக்க சக்திகளை எதிர்த்து எமது விடுதலை இராணுவமாகிய புலிப்படை நடாத்திய வரலாற்றுப் போரை எடுத்துக் காட்டுகின்றன இந்தப் பாடல்கள்.

காலத்தால் அழிந்து போக முடியாத இந்த யுத்த காணங்கள் உருவாக, முழுமன தோடு ஒத்துழைத்த அனைத்து நெஞ்சங்களுக் கும், தமிழீழ மக்களின் சார்பில் புலிகளின் நன்றி.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 1

தமிழே உயிரே வணக்கம்
தாய் பிள்ளை உறவம்மா
உனக்கும் எனக்கும்
தமிழே உயிரே......

அமிழ்தே நீ இல்லையென்றால்
அத்தனையும் வாழ்வில் கசக்கும் புளிக்கும்
தமிழே உயிரே......

தமிழே உன்னை நினைக்கும்
தமிழன் என்நெஞ்சம் இனிக்கும் இனிக்கும்
அமிழ்தே உன் எழில் நினைத்தால்
ஆயிரம் பூக்கள் சிரிக்கும் சிரிக்கும்
தமிழே உயிரே......

தமிழே நீயே என் இயக்கம்
தாய் நீ என் வழிக்கும் நடைக்கும்
அமிழ்தே நீ தரும் இன்பம்
அடியேன் வாழ்வில் வேறெங்கேகிடைக்கும்
தமிழே உயிரே......

தமிழே இன்றுன்னைப் பழிக்கும்
தறுக்கன் உலகில் இருக்கும்வரைக்கும்
அமிழ்தே நீ வாழும் மண்ணில்
அனலே பெருக்கும் அனலே பெருக்கும்
தமிழே உயிரே......

தமிழே உனக்கேன் கலக்கம்
தாயே பொறம்மா முழக்கம் வெடிக்கும்
அமிழ்தே உனை எவன் தொட்டால்
அவனை என் கைவாள் அழிக்கும் முடிக்கும்
தமிழே உயிரே......

---

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 2

*மறவர் படைதான் தமிழ்ப்படை — குல*
*மானம் ஒன்றுதான் அடிப்படை*
*வெறி கொள் தமிழர் புலிப்படை — அவர்*
*வெல்வார் என்பது வெளிப்படை*
*மறவர் படைதான்......*

*புதிதோ அன்று போர்க்களம் — வரும்*
*புல்லர் போவார் சாக்களம்*
*பதறிப் போகும் சிங்களம் — கவி*
*பாடிமுடிப்பான் மங்களம்*
*மறவர் படைதான்......*

*தமிழன் பண்பில் உருப்படி — அவன்*
*தலையும் சாய்ப்பான் அறப்படி*
*அமையும் தன்மை முதற்படி — பிறர்*
*அடக்க வந்தால் செருப்படி*
*மறவர் படைதான்......*

*வீரம் வீரம் என்றாடு — நீ*
*வேங்கை மாற்றான் வெள்ளாடு*
*சீறிடும் பாம்பை வென்றாடு — கண்*
*சிவந்து நின்று போராடு*
*மறவர் படைதான்......*



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

3

நாயே உனக்கும் ஒரு நாடா — எச்சில்
நாடும் உனக்கு வரலாறா
தாயாள் புலம்புகிறவேளை — மாற்றான்
காலைக் கழுவுகிற கோழை

நாயே.....

பேயாய் இருந்து தொலைவாயா — உன்னை
பெற்றாள் துயர் அகல வேண்டும்
நீயே தடைபகைவர் அல்லர் — தமிழ்
நிலத்தில் பிறந்த படுபாவி

நாயே.....

காட்டிக் கொடுப்பதுதான் தொண்டா — சொந்தக்
கண்ணைப் பிடுங்குவது நன்றா
நாட்டில் இருந்த சிறுமானம் — உன்னால்
நாறும் நிலமை வரலாமா

சோற்றில் விழைந்தசதைக் கூடு — உன்னை
சும்மா விடுவதெனில் கேடு
ஈட்டி எடுத்தெறிய வேண்டும் — உந்தன்
இதயம் பிளந்துபடல் வேண்டும்

ஆண்டில் முதிர்ந்த தமிழ் அன்னை — அவள்
அறிவாள் இதுவரையும் உன்னை
தாண்ட முடியாதெனும் தொல்லை — நீ
தந்ததை மறப்பளா இல்லை

மாண்டு போம் மறவர்கள் உண்டு — நாளை
மாற்றார்கள் உடல்துண்டு துண்டு
மீண்டுமோர் தமிழகம் தோன்றும் — தமிழ்
மேன்மைகள் மண்ணிலே தோன்றும்

நாயே.....

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

4

நம் நாடு தமிழ்நாடு இங்கே — ஒரு
நாடுண்டு நாமெல்லாம் உண்டு
தொன்மைசேர் வரலாறும் உண்டு — மலை
தோழுண்டு ஆட்சிதான் இல்லை இல்லை
நம்நாடு......

வயலுண்டு சோலைகள் உண்டு — மண்ணில்
வாய்ந்த கனிப் பொருள் உண்டு
வெய்யிலுண்டு வான் மழை உண்டு — ஒரு
வேலிதான் நம் நாட்டில் இல்லை
நம்நாடு......

கரும்புண்டு சர்க்கரை உண்டு — நல்ல
கால் நடை செல்வமும் உண்டு
இரும்புண்டு ஏராளம் உண்டு — தமிழ்
இனம் என்ற வாழ்வுதான் இல்லை இல்லை
நம்நாடு......

மொழியுண்டு பாவலர் உண்டு — கலை
மூற்றும் தெரிந்தவர் உண்டு
பல முண்டு வீரரும் உண்டு — சொந்தப்
படை என்ற ஒன்றுதான் இல்லை இல்லை
நம்நாடு......

மூத்துண்டு உப்புண்டு உண்டு — நெய்தல்
முற்றத்தில் மீன் காய்வதுண்டு
மொத்தத்தில் எல்லாமே உண்டு — தமிழ்
முடிமட்டும் இல்லாத நாடு நாடு
நம்நாடு......

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

**5**

பட்டினி கிடந்து பசியால் மெலிந்து பாழ்பட நேர்ந்
தாலும் — எந்தன்
கட்டுடல் வளைந்து கைகால் கழன்று கவலை மிகுந்
தாலும் — வாழ்வு
கெட்டு நடுத்தெருவோடு கிடந்து கீழ் நிலையுற்றாலும்
— மன்னர்
தொட்டு வளர்த்த தமிழ் மகளின் துயர் துடைக்க
மறப்பேனா

நோயில் இருந்து மயங்கிவழைந்து முடங்கி விழுந்
தாலும் — ஓலைப்
பாயில் நெளிந்து மரணம் அடைந்து பாடையில்
ஊர்ந்தாலும் — காட்டுத்
தீயில் அவிந்து புனலில் அழிந்து
சிதைந்து முடிந்தாலும் — எந்தன்
தாயின் இனிய தமிழ் மொழியின் துயர்
தாங்க மறப்பேனா

பட்ட மளித்துப் பதவி கொடுத்து — ஒரு
பக்கம் இழுத்தாலும் — வாழ்வோர்
கட்டி அணைத் தொரு முத்தமளித்து
கைகால் பிடித்தாலும் — என்னை

தொட்டு விழுந்து வணங்கி இருந்தவர்
தோழமை கொண்டாலும் — அந்த
வெட்டி மனிதர் உடல்களை மண்ணில்
வீழ்த்த மறப்பேனா

பட்டினி கிடந்து......

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 6

பாரதி இருந்திருந்தால் பசுந்தமிழ்
பண் ஒன்று இசைத்திருப்பான் — அதில்
வீரம் மிகுந்த தமிழ்நாட்டார்
வீறுற்று எழுந்திருப்பார்

சிங்களத் தீவினிற்கோர் பாலம்
செய்து முடித்திருப்பார் — அங்கே
சங்கம் அமைத்திருப்பார் — பகையும்
சாடித் தொலைத்திருப்பார்

பொன்னினால் ஆடைபட்டுகள்
போர்த்தி மகிழ்ந்திருப்பார்
அவன் எண்ணக் குவியல்களில் தினமும்
இன்புற்றிருந்திருப்பார்

ஆட்சி நடுங்கும்விதம் — கவிகளை
அள்ளிச் சொரிந்திருப்பான் — தமிழ்
மீட்சி கிடைத்திருக்கும் நாட்டில்
மீன்புலி வில் பறக்கும்

சாதி ஒழிந்திருக்கும் — மடமை
சாவை அணைத்திருக்கும் — எங்கும்
நீதி பிறந்திருக்கும் — தமிழர்
நெஞ்சம் பிறந்திருக்கும்

சோறு சோறு எனவே — இன்று
சொல்லித் திரிபவர்க்கு — தமிழ்
சாறு முதலில் வேண்டுமென்றே
சாட்டை கொடுத்திருப்பார்

பாரதி இன்றிருந்தால் — தமிழர்
பாவையால் வாழ்ந்து வரும் மறச்
சேரன் குலத்தவரே முக்கனி
சேர்ந்து முழுகினரே

பாரதி இன்றிருந்தால் .....

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

7

மானமெனும் ஒரு பானையில் வாழ்வெனும்
தீனி சமைத்தவனே — தமிழ்
போனதடா திரை போனதடா — அட
பொங்கி எழுந்திடடா
மானமெனும்...

காட்டு தமிழ் மரம் ஒட்டு வரும் பகை
பூட்டு நொருக்கிடுவாய் — நிலை
நாட்டு குலப்புகழ் தீட்டு புதுக்கவி
ஏற்று தமிழ்க் கொடியே
மானமெனும்...

முந்து தமிழ்மொழி நொந்து வதைபட
இந்தி வலம் வரவோ — இது
நிந்தை உடன் உயிர் தந்து புகழ்பெற
வந்து களம் புகுவாய் மானமெனும்...

நாறு பிணக்களம் நூறு படித்தனம்
வீறு மிகுந்த குலம் — வெறும்
ஊறு துடைத்திடும் ஆறு புறப்படு
ஏறு நிகர்த்தவனே மானமெனும்...

நாலு திசைகளும் சூழ நடுங்கியே
கோழை எனக் கிடந்தாய் — மலை
தோழும் குனிந்தது ஓலம் விழித்தெழ
காலம் அழைக்குதடா மானமெனும்...

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

**8**

*புள்ளி சிறகடித்து பாடுகுயிலே — தமிழன்*
*புதிது பிறந்தானென்று பாடுகுயிலே*
*வெள்ளி குரலெடுத்து பாடுகுயிலே — எங்கள்*
*விடுதலை வந்த தென்று பாடுகுயிலே*
*புள்ளி...*

*நேற்று வரை உலகில் அஞ்சி நடந்தோம் — பிறர்*
*நீட்டும் எலும்புகளை உண்டு கிடந்தோம்*
*காற்றுத்திரும்பியது கண்டு மகிழ்ந்தோம் — ஒரு*
*கவிதை பிறந்ததென்று பாடுகுயிலே*
*புள்ளி...*

*சாதிப் பிரிவினைக்கு சாட்டை கொடுத்தோம் — தமிழ்*
*சாதிக்கு மட்டும் இந்த நாட்டைக் கொடுத்தோம்*
*வீதிக்கு வீதி மொழி வேட்கை படைத்தோம் — விடி*
*வெள்ளி முளைத்ததென்று பாடுகுயிலே*
*புள்ளி...*

*ஆளப் பிறந்தவர்கள் நாடு சமைத்தோம் — எமை*
*ஆட்டிப் படைப்பவர்க்கு பாடை சமைத்தோம்*
*ஈழத் தமிழ் மனைக்கு பாலம் அமைப்போம் — கவி*
*எண்ணம் பலித்ததென்று பாடுகுயிலே*
*புள்ளி...*

*எட்டு திசைகளிலும் வெற்றி மகிழ்ந்தோம்—விண்ணில்*
*எல்லை தனிலே கொடி கட்டி மகிழ்வோம்*
*கொட்டும் முரசோடு கை தட்டி மகிழ்வோம் — இது*
*கொள்ளை மகிழ்ச்சி என்று பாடுகுயிலே*
*புள்ளி...*

---

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

9

வாருங்கள் புலிகளே தமிழீழம் காண்போம்
வாழ்வா சாவா ஒருகை பார்ப்போம்
முந்தை எங்கள் தந்தை வாழ்ந்த முற்றமல்லவா
முடிசுமந்து நாங்கள் ஆண்ட கொற்றமல்லவா
இந்த மண்ணின் மக்கள் எங்கள் சுற்றமல்லவா
தமிழ் ஈழ மண்ணை மறந்து வாழ்தல் குற்றமல்லவா
வாருங்கள்...

ஞாலம் போற்ற வாழ்ந்தோம் இந்தக் கோலம் நல்லதா
நாலுதிக்கும் நம்மை அடிமை என்று சொல்வதா
ஈழ மண்ணில் எங்கள் கண்ணீர் நாளும் வீழ்வதா
அட இன்னும் இன்னும் அந்நியர்கள் எம்மை ஆழ்வதா
வாருங்கோ...

தமிழர் பிள்ளை உடல் தளர்ந்த கூனல் பிள்ளையா
தடிமரத்தின் பிள்ளையா உணர்ச்சி இல்லையா
தமிழா என்னடா உனக்கு போர் ஓர் தொல்லையா
உன் தாய் முலைப்பால் வீரம் நெஞ்சில் பாயவில்லையா
வாருங்கள்...

வேல் பிடித்து வாழ்ந்த கூட்டம் கால்பிடிக்குமா
வீழ்ந்த வாழ்வு மீள இன்னும் நாள் பிடிக்குமா
தோள் நிமிர்த்தி தமிழர் தானை போர் தொடுக்குமா
எங்கள் சோழர் சேரர் பாண்டியர் போல் பேரெடுக்குமா
வாருங்கள்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 10

நம்புங்கள் தமிழீழம் நாளைபிறக்கும்
நாட்டின் அடிமை விலங்கு தெறிக்கும்

பாரில் தமிழ் மண் வீரம் படைக்கும்
பகைவனோடும் சேதி கிடைக்கும்
போரில் வெற்றி முரசும் முழங்கும்
புலிகள் கழுத்தில் மாலை குலுங்கும்

நம்புங்கள்...

கூண்டுப் பறவை சிறகை விரிக்கும்
குனிந்த முகங்கள் நிமிர்ந்து சிரிக்கும்
மாண்ட வீரர் கனவு பலிக்கும்
மகிழ்ச்சிக் கடலில் தமிழ் மண் குளிக்கும்

நம்புங்கள்...

வானம் நமது கொடியை அழைக்கும்
மாற்றார் முகத்தில் நாணம் முளைக்கும்
மானம் நமக்கோர் மகுடம் வழங்கும்
மண்ணில் நமது பெயரும் விளங்கும்

நம்புங்கள்...



பாடியவர் தேனிசை செல்லப்பா | பாடலாசிரியர் வ. மு. சேதுராமன் | இசை தேனிசை செல்லப்பா

## 11

செந்தமிழ் மகனின் இரத்த நிறம்
தேயிலைச் சாற்றின் சிவப்பு நிறம்
எம் தமிழ் மகனின் இதய நிறம்
றப்பர் மரப்பால் வெள்ளை நிறம்
செந்தமிழ்...

தமிழ்த்தாய் சேய்க்கு கரும்பாலை
தந்தாள் றப்பர் மரப்பாலாய்
தமிழர் உடம்பே உரமாகி
தளைத்தது தேயிலைக் கொடிகளெல்லாம்
செந்தமிழ்...

சந்தணமரமாய் தனைத் தேய்த்தான்
தளைத் திடும் சிங்களன்
சினம் ஏற்றான்
விந்தைத் தமிழன் உழைப்பினிலே
வேறோர் இனமே கொழுத்ததம்மா
செந்தமிழ்...

* *

*பாடியவர்* — தேனிசை செல்லப்பா, சொர்ணலதா
*பாடலாசிரியர்* — புதுமைப்பித்தன்
*இசை* — தேனிசை செல்லப்பா

**12**

பெ:- கண்ணுறங்கு கண்ணுறங்கு
காலமெல்லாம் கண்ணுறங்கு
வண்ணத் தமிழ் என்னினமே
வாயடங்கிக் கண்ணுறங்கு

ஆ:- கன்னித் தமிழ் வானத்திலே
இன்னும் இருள் போகவில்லை
தென்னிலங்கைச் சீமையிலே
தெருவெல்லாம் கண்ணுறங்கு

பெ:- ஆண்ட கதை எப்பொழுது
அன்னியர்கள் கையாலே
மாண்டகதை இப்பொழுது
மண்மடியில் கண்ணுறங்கு

ஆ:- தேயிலையின் பச்சை நிறம்
செந்தமிழன் இரத்தமடா
செந்தமிழர் இரத்தமெல்லாம்
நாய் குடித்து விட்டதடா

பெ:- கொள்ளிவைக்கும் பிள்ளைகளே
கொள்ளியிலே வேகுதடா
அள்ளிவைத்த தாய் வழியோ
ஆறுகுளம் ஆகுதடா

ஆ:- குட்டி மணி கண்களிலே
கொட்டிவைத்த இரத்தத்திலே
எட்டி நின்ற வானம் எல்லாம்
செக்கர் நிறம் ஆனதடா

காட்டுப் புலி அத்தனையும்
கால் நடுங்கப் பாய்ந்துவரும்
நாட்டுப்புலி வீரர்களின்
வேட்டுச்சத்தம் கேட்குதடா

ஆ:- யாழ்நகர வீதியிலே
சோக இசை கேட்குதடா
சோக இசை ஓர் நொடியில்
வீர இசை ஆனதடா

பெ:- ஈழ மண்ணின் ஈரத்திலே
வீர விதை விழுந்ததடா
வீர விதை வீழ்ந்ததனால்
விடுதலையும் தோன்றுமடா

ஆ:- தோன்றுகின்ற வேளைவரை
தோகை மயில் கண்ணுறங்கு
ஈன்றெடுத்த செந்தமிழ் போல்
இன்னுயிரே கண்ணுறங்கு
ஆரிரரோ ஆரிரரோ ஆராரோ



பாடலாசிரியர்
காசி ஆனந்தன்

13

எழுந்திரடா தமிழா
ஏடா என்னடா உனக்கின்னும்
உறக்கமோடா எழுந்திரடா...

பழந்தமிழரை நிலத்தை
ஈழம் என்றதோர் மண்ணை
பறிகொடுப்பதோடா
எழுந்திரடா...

அழிந்திடவா பிறந்தோம் — மூடா
ஆமை போல் இருந்தால்
வழி பிறக்கு மோடா
இழந்த புகழ் பெறுவோம் — வாடா
நாமிங்கு இன்றோர் ஆட்சி நடப்பதோடா
எழுந்திரடா...

குடிப்பெருமை அனைத்தும்
சாய்ந்து குப்புற விழ
நாங்கள் குறை படுத்தோம்
அடக்கு முறை தொடுக்கும்
பேயர் ஆட்சியின் பிடி
ஒன்றாலா அவதியுற்றோம்
எழுந்திரடா...

துடித் தெழுவோம் நமது
வீரப் போர்களுக்கொரு
வேலை துவக்கி வைப்போம்

படைக் களத்தில் நடந்து
பார்ப்போம் மார்புகழ் அழு
பாய்ந்து புறப்படடா

எழுந்திரடா...

சிறைக்கதவு திறந்து வாவென்று
அழைப்பிணைந்தரி ஆந்தை தெருக்களத்தில்
நரிக் குரல் எழுந்து காதில் குலைத்திடும் சரி
நாங்கள் பணியமாட்டோம்
வெறிப்படைகள் நுழைந்து — தாக்கி
நொருக்கினால் வீழ்ந்து வணங்குவோமோ
மறக்குலத்தில் வளர்ந்த வீரன் உயிரையும்விட
மானம் பெரி தென்றோடா

எழுந்திரடா தமிழா...



பாடலாசிரியர்
காசி ஆனந்தன்

## 14

இடிக்கின்றாய் வான் முகிலே — ஏன்
இடித்தாய் இங்குள்ள தமிழர் நெஞ்சில்
வெடிக்கின்ற விடுதலையில் பேர் ஆர்வம்
வெளிக்காட்ட விரும்பினாயோ — வான்முகிலே
இடிக்கின்றாய்....

கறுப்பாக வருகின்றாய் வான்முகிலே
ஏன் கறுப்பாய்
களத்தில் பாய விருப்போடு
நான் பார்க்கும் தமிழ் வீரர்
வரலாற்றை விளக்கினாயா
இடிக்கின்றாய்—

சிரிக்கின்றாய் மின்னல் வாழ்
வான்முகிலே ஏன் சிரித்தாய்
சினந்து மண்ணை — எரிக்கின்ற
தமிழ்ப் புலமை கவிதையினை
வானேற்றி எழுதினாயா
இடிக்கின்றாய்—

ஓடிப்போ ஓடிப்போ வான்முகிலே
ஓ வென்று
முழக்கமிட்டு
காடிப்பாவிரட்டும் மண்வீடு
காணத்தம் பகைவர் இல்போல்
இடிக்கின்றாய்—

பாடலாசிரியர்
காசி ஆனந்தன்

15

முந்தி முழைத்த கலங்கரை
தமிழ்ப் பரம்பரை — நடு
சந்தியில் வீழ்ந்து துடிப்பதேன்
சாய்ந்து கிடப்பதேன்

முந்திமுழைத்த......

அள்ளிக் கொடுத்த கை கேட்குதே
ஓடு தூக்குதே
இலை கிள்ளிப் பொறுக்கித் திரியுதே
உள்ளம் எரியுதே

முந்திமுழைத்த......

மாற்றான் தலைகளில் ஏற்றினாய் — கல்லை
ஏற்றினாய்
இன்று மூட்டை சுமந்தே நடக்கிறாய்
தாழ்ந்து கிடக்கிறாய்

முந்திமுழைத்த......

ஆதியில் மாடம் அமைத்தவர்
வாழ்வு சமைத்தவர் — அட
வீதியில் காலம் கழிப்பதா
நால்வர் பழிப்பதோ

முந்திமுழைத்த......

முல்லைக்குத் தேரை வழங்கினோம்
என்று முழங்கினோம்
இங்கு பிள்ளைக்குப் பாலில்லை
பாரடா தருவார் யாரடா

முந்திமுழைத்த......

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| சொர்ணலதா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

16

நானோர் கனாக் கண்டேன் தோழி — தமிழ்
நாட்டின் விடுதலை
கேட்கப் பிறந்தவர் தானை நடத்தினார் தோழி

அங்கு சட்டம் உடைந்தது
பகைவர் தலைகள் வானில் பறந்தன தோழி — இந்த
வையம் குருதியில் தோய்ந்து கிடந்தது
வானத்தின் வேகமோ தோழி
தமிழ் மாந்தரின் வீரத்தை என்னென்று சொல்வேன்

ஈழத்தில் சிங்களம் என்றார் — தமிழ்
இல்லத்தில் என்றும்
இந்திதான் என்றும் குலைத்தார்
வேழத்தை வென்றவர் நாட்டில் — இந்த
வீணர்கள் ஏன்வந்து மோதினார் தோழி.

கூழுக்கு வழியற்றுப் போனோம் — என்றால்
குல வீரம் கூடவா இல்லாமல் போனோம்
பாழுக்கு வந்தார்கள் தோழி — வந்த
பகைவரை வணங்காத தமிழ்நாடு வாழி

வீண்சண்டை போட்டதும் இல்லை — தமிழன்
வீணாக வந்ததை விட்டதும் இல்லை
நூறொன்று சாய்ந்தாலும் சாயும்
தமிழன் தாய்வீரம் இதுவரை சாய்ந்ததே இல்லை

ஆண் என்று வாழ்ந்தவர் எல்லாம் — இங்கே
ஆமைபோல் அடிமைபோல் உயிர் வாழ்ந்ததில்லை
—பகைவர்

பூணாத போர்க்கோலம் பூண்டார்
புலியோடு மோதினார் என்செய்வோம் தோழி

காதலர் வரவில்லை தோழி — அவர்
களத்திலே இருக்கட்டும் இங்கென்ன வேலை
மோதட்டும் பகைவர்கள் முன்னால் — தோழி
முத்தமும் சத்தமும் அவற்றிற்குப் பின்னால்

மாதர்கள் வீரமே பெரிதாம் — அவர்
மாண்டாலும் போரிலே மாழட்டும் என்பேன்
ஆதலால் இசை பாடு தோழி — தமிழ்
அன்னையின் புகழ்பாடு வாழட்டும் நாடு



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| மலேசியா வாசுதேவன் | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

## 17

நடடாராசா மயிலக்காளை
நல்ல நேரம் வருகுது
நட டாராசா சிவலைக்காளை
நாளை விடியப் போகுது

நடடாராசா— —

பொழுது சாயும் நேரம் — இது
புலிகள் வாழும் தேசம்

ஈழக்கடலில் மோதும் அலைகள்
என்ன சொல்லிப் பாடும்
இந்த நாட்டில் வீசும் காற்று
என்ன சொல்லிப் பேசும்
நீல மேகம் எங்கள் நாட்டில்
நின்று பார்த்துப் போகும்
நீங்கள் வெற்றி சூடவேண்டும்
என்று வாழ்த்துக் கூறும்
வென்று வாழ வாழ்த்தும்

நடடாராசா—...

ஊரில் எங்கும் புலியைத் தேடி
ஊர்வலங்கள் வாரும்
கூரை எங்கும் ஏறி நின்று
குண்டு போட்டுப் பாரும்
போரில் எங்கள் புலிகள் செய்த
புதுமை கேட்டுப் பாரும்
புலரும் காலை தலைவன் மீது
பரணி கொண்டு பாடும்
தரணி எங்கும் கேட்கும்

நடடாராசா...—

காடு மேடு வீதி எங்கும்
கண்விழித்துக் கொள்வார்
காற்றில் கூட எங்கள் வீரர்
கண்ணி வெடிகள் வைப்பார்
போற்றி போற்றி பிள்ளையாரே
புலிகள் வாழ வேண்டும்
பேய்கள் ஓடிப் போக வேண்டும்
புலிகள் சூழ வேண்டும்
நாங்கள் வாழ வேண்டும்

நடராசா......



18

பெ:- நாமோர் கனவு கண்டோம்
எமக்கென நாடு வரும்
எனக் கொண்டோம்

ஆ:- நாளும் பொழுதும்
அதற்கே மாண்டோம் — அந்த
நாளும் நிறைந்து
வந்தது கண்டோம்

நாமோர் கனவு......

பெ:- சிங்கள அரசின் நிர்வாகம் — இனி
எங்கள் நாட்டில் நடக்காது

ஆ:- தங்களின் குறைகளை தீர்ப்பதற்கே
இங்குள்ள மக்களே எழுந்துவிட்டார்

நாமோர் கனவு.....

பெ:- புயலாய் இளைஞர் புறப்பட்டார்
கயவர்கள் இல்லை நாட்டுக்குள்ளே

ஆ:- அயலவர் யாவரும் ஒன்றுபட்டால்
துயர்வரவில்லை வீட்டுக்குள்ளே

நாமோர் கனவு....

பெ:- சூழ்ந்திடும் பகைதனை ஓடவிரட்டி
சுவர்க்கம் ஒன்றினை பூமியில்கட்டி

ஆ:- வாழ்ந்திடும் நாள் வெகு தூரமில்லை
எனமகிழ்ந்திருந்தோம் ஆடிப்பாடி

நாமோர் கனவு—

*பாடலாசிரியர்*
புதுவை இரத்தினதுரை

*இசை*
தேனிசை செல்லப்பா

## 19

இந்திய இராணுவ புண்ணிய வான்களால்
ஈழம் எரிந்ததம்மா — தமிழ்
ஈழம் எரிந்ததம்மா — நாங்கள்
சிந்திய இரத்தங்கள்
வீதிகள் யாவிலும் தேங்கிக்கிடந்ததம்மா
நாய்கள் தேடிக் குடித்ததம்மா

இந்திய...

கன்னி மலர்களை அந்நிய இராணுவம்
காலில் மிதித்ததம்மா — அவர்
கற்பைப் பறித்ததம்மா
சின்னப் பிஞ்சுகள் யாவுமே குண்டுகள் பட்டுமே
பிணமெனச் சாய்ந்ததம்மா — ஒரு
போர்க்களமானதம்மா

இந்திய...

கோவில்கள் தேடியே ஓடிய மக்களை
கொன்று குவித்ததம்மா — பசி
கோரங்கள் ஆனதம்மா — பலர்
ஆவிப் பசிக்குணவு இன்றியே போனது
அங்கம் துடித்ததம்மா — ஒரு
ஆறுதல் இல்லையம்மா

இந்திய...

சின்ன குழந்தைகள் பாலுக்கு அழுதபின்
சோர்ந்து விழுந்ததம்மா — இலை
சோற்றுக்கு அழுததம்மா — தாயின்
கண்கள் அழுதது
கங்கை என்றானது நெஞ்சம் மறந்திடுமா — அந்த
நினைவு மறைந்திடுமா

இந்திய...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

**20**

பொறி கக்கும் விழியோடு புறப்பட்டுவிட்டோம்
போராட நாட்குறிப்போம்
எறிகுண்டு பாய்ந்தாலும் இருகைகொண்டேற்போம்
எதற்கும் நாம் துணிந்துவிட்டோம்

பொறி...

நெறிகெட்ட பகைவரின்
முறை கெட்ட வாழ்வால்
நெருப்பாக மாறிவிட்டோம்
வெறி கொண்டு தாவினோம்
வீரத்தின் மடியில்
விளையாடத் தொடங்கிவிட்டோம்

கடல் பொங்கினால் போல்
உடல் பொங்கி வந்தோம்
களத்திலே ஆடவந்தோம்
படை கொண்டு மானத்தின்
நடை கொண்டு வந்தோம்
பழி தீர்க்க ஓடிவந்தோம்

திடல்வெள்ளமாக
திசைகள் நடுங்க
திடு திடு மென்ன வந்தோம்
தடைகளை வெல்வோம்
விடுதலை கொள்வோம்
தமிழர் நாம் ஓயமாட்டோம்

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | இன்குலாப் | தேனிசை செல்லப்பா |

## 21

கேடயமாய் எம்மை காத்த — எம்
மக்களே வாளாகவும் — இனி
மாறுங்கள்
ஈரம் மிகுந்த நெஞ்சங்களே — இனி
வீரம்காட்டவும் வாருங்கள்

கேடயமாய்...

விழியினும் மேலான
தாயகம் மீட்க
விடுதலைப் புலிகளாய் எழுந்தோம்

மீனுக்கு நீராய்
வேருக்கு மண்ணாய்
இருந்தீர்கள் நாங்கள் நிமிர்ந்தோம்

இனியும் எமது போராட்டம் தொடரும்
விடுதலை நமது எல்லை

துணை வந்த நீங்கள்
தோளை உயர்த்தினால்
விடுதலை வெகு தூரமில்லை கேடயமாய்...

மக்கள் திரள் என்ற
மாபெரும் சக்திதான்
நமது தாயகம் மீட்கும்

மக்கள் யுத்தம் என்ற
மாபெரும் யுக்திதான்
நமது பணி எளிதாக்கும்

தோழமைப் புறாக்கள்
நம் துணையாகும்
கொடிய வல்லூறை எதிர்க்கின்றபோது

தொடர்கின்ற போரில்
மக்கள் துணை கொண்டால்
விடுதலை இனித்தப்பாது கேடயமாய்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா<br>சொர்ணலதா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 22

யாரிதைச் சொல்லவில்லை
இன்று யாரிதைச் சொல்லவில்லை
போர்வெறி கொண்ட இந்தியப்படைகளே
ஈழ மண்ணைவிட்டு போவெளியே என்று
யாரிதைச் சொல்லவில்லை

ஆ:- தாகம் கொண்டோர் முன்பு கானல்விரிந்தது

பெ:- தழுவ வந்தோர் தம் முகத்தில் அறைந்தது

ஆ:- சோகச் சுமைகளும் மேலும் கனத்தது

பெ:- துணை என்று நீண்டகை கழுத்தை நெரித்தது
யாரிதைச்...

ஆ:- யாசகத் திருவோடு துரோகிகள் ஏந்தலாம்

பெ:- அடிமைச் சுகத்தினில் பல்லாண்டு பாடலாம்

ஆ: தியாகத்திருக்கரம் உனக்காக நீளுமா

பெ:- தாய்த் தாயகத்தை தான்விலை கூறுமா
யாரிதைச்...

ஆ:- தமிழீழ முழக்கம்
வெளியே போ வெளியே போ

பெ:- தமிழ்நாட்டு முழக்கம்
வெளியேறு வெளியேறு

ஆ:- இந்திய மக்களும் இதனையே கூறினர்

பெ:- சிங்கள மக்களும் சேர்ந்து கொண்டனர்
யாரிதைச்...

ஆ:- போதி நிழல்களில் புகைமூட்டம் கண்டது

பெ:- அசோகச் சக்கரம் குருதியில் புரண்டது

ஆ:- புத்தர் முகங்களில் கிட்லர் முசோலினி
புன்னகை புரிந்ததைப் புரிந்தது மேதினி
யாரிதைச்...

ஆ:- திரும்பும் திசையெல்லாம் உனக்கெதிராக

பெ:- திரள்கின்ற மானிடம் உனக்கெதிராக

ஆ:- உலக மனச்சாட்சி உனக்கெதிராக

பெ:- வெளியே போ இந்தியா உடனடியாக
யாரிதைச்...



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| டி. எல். மகாராஜன் | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

23

காற்றும் ஒரு கணம் வீச மறந்தது
கடலும் ஒரு நொடி அமைதியாய் கிடந்தது
தேற்றுவார் இன்றி யெம்
தேசம் அழுதது.
தீருவில் வெளியிலும்
தேகங்கள் எரிந்தது

தீயினில் எரியாத தீபங்களே — எம்
தேசத்தில் நிலையான வேதங்களே
மண்ணினில் விதையான முத்துக்களே — நாம்
மாதவம் செய்து பெற்ற சொத்துக்களே
நெஞ்சினில் நெருப்பேந்தி வாருங்கள் — புலி
நிச்சயம் வெல்லுமென்று கூறுங்கள்

கடலினில் கடல் புறா பயணங்கள் போனது
சிறீலங்கா ராணுவம் குறிவைக்கலானது
குமரப்பா புலேந்திரன் உடன் பத்து வேங்கைகள்
கொள்கையின் படி நஞ்சை
குடித்தபின் சாய்ந்தனர்
இளமையில் சருகாகிப் போனவரே — எம்
இதயத்தில் உருவான கோயில்களே
நெஞ்சினில் நெருப்பேந்தி வாருங்கள் — புலி
நிச்சயம் வெல்லுமென்று கூறுங்கள்

அப்துல்லா ரகு நளன் ஆனந்த குமார் மிரேஸ்
அன்பழகன் ரெஜினோல்ட் பழனி
கரனுடன் தவக்குமார்
ஆகிய வேங்கைகள் அனலிடை போயினர்

காவிய நாயகர் களப்பலியாயினர்
மக்களுக்காக கடல் சென்றீரே
மணமாலைகள் வாடுமுன்னே போனீரே
நெஞ்சினில் நெருப்பேந்தி.........

எங்களின் கடலிலே எவர் எம்மை பிடிப்பது
எங்களின் படகினை எவன் இங்கு தடுப்பது
இந்திய அரசது ஏன் துணைபோனது
இடியுடன் பெருமழை ஏன் உருவானது
கண்களில் நீர் சுமந்து நிற்கின்றோம் — நீர்
காட்டிய பாதையில் செல்கின்றோம்
நெஞ்சினில் நெருப்பேந்தி வாருங்கள் — புலி
நிச்சயம் வெல்லுமென்று கூறுங்கள்



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| வாணிஜெயராம் | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

## 24

வீசுங்காற்றே தூது செல்லு — தமிழ்
நாட்டிலெழுந்தொரு செய்தி சொல்லு
ஈழத்தில் நாம்படும் வேதனைகள் — இதை
எங்களின் சோதரர் காதில் சொல்லு

வீசுங்...

இங்கு குயிலினம் பாடமறந்தது
எங்கள் வயல்வெளி ஆடை இழந்தது
தங்கைகளின் பெரும் மங்களம் போனது
சாவு எமக்கொரு வாழ்வென ஆனது

வீசுங்...

உங்கள் கொடிமலர் இங்கு மடியுது
ஊர்மனை யாவிலும் சாக்குரல் கேட்குது
இங்குள்ள பேய்களும் செய்ய மறந்ததை
உங்களின் ராணுவம் செய்துமுடிக்குது

வீசுங்...

கத்திடக் கேட்டிடும் தூரமல்லோ — கடல்
கைவந்து தாங்கிடும் நீளமல்லோ
எத்தனை எத்தனை இங்கு நடந்திட
எங்களின் சோதரர் தூக்கமல்லோ

வீசுங்...

வேங்கையை வேட்டைகள் ஆடுகிறார் — புலி
வீரரை காட்டினில் தேடுகிறார்
தாங்க முடியல்லை வேதனைகள் — இதை
தாயக பூமியின் காதில் சொல்லு

வீசுங்...

---

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தினேஷ் | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

25

அடைக்கலம் தந்த வீடுகளே
போய்வருகின்றோம் நன்றி — நெஞ்சை
அடைக்கும் துயர் சுமந்து செல்கின்றோம்
உங்கள் அன்புக்கு புலிகள் நன்றி

அடைக்கலம் ...

நாங்கள் தேடப்படும் காலத்தில் நீங்கள்
கதவு திறந்தீர்களே — எமைத்
தாங்கினால் வரும் ஆபத்தை எண்ணி
பார்க்க மறந்தீர்களே ... பார்க்க மறந்தீர்களே...
பார்க்க மறந்தீர்களே......

அடைக்கலம்—

எங்கள் உடல்களில் ஓடும் செங்குருதி
உங்கள் சோறல்லவா... உங்கள் சோறல்வா...
நாங்கள் தங்கியிருந்த நாள் சிலநாள் என்றாலும்
நினைவு நூறல்லவா...

அடைக்கலம்...

பெற்றோரை உறவை பிரிந்திருந்தோம்
அந்த இடத்தை நிறைத்தீர்களே — மாற்றார்
முற்றுகை நடுவில் மூடி எமையுங்கள்
சிறகால் மறைத்தீர்களே... சிறகால் மறைத்தீர்களே

அடைக்கலம்...

பாடலாசிரியர்
புதுவை இரத்தினதுரை

பாடியவர்
எம். எஸ். ராஜேஸ்வரி

26

காகங்களே காகங்களே காட்டுக்கு போவீங்களா?
காட்டுக்கு போயெங்கள் காவல் தெய்வங்களை
கண்டு கதைப்பீர்களா
கண்டு கதைப்பீர்களா — இதை
காதில் உரைப்பீர்களா?

காகங்களே...

ஈழநிலத்தினில் ஆழப்பதிந்தவர்
எங்கள் எதிரியை எட்டி உதைத்தவர்
வீரப்புலிப்படை என்று — நாங்கள்
வீட்டில் கதைக்கிறோம் இன்று
வீட்டில் கதைக்கிறோம் என்று
இதை வீசும் புயலைக்கடந்து

காகங்களே...

இந்திய இராணுவம் சுற்றி வளைக்குது
இந்தியில் ஏதேதோ சொல்லி மூறைக்குது
பள்ளிக்கு எப்படி போவோம் — அவன்
பாதையில் நின்றிடில் சாவோம்
பாதையில் நின்றிடில் சாவோம்
நாம் சாகும் நிலை நினைத்து

காகங்களே...

நள்ளிரவானதும் நாய்கள் குலைக்குது
நாலு தெருவிலும் ஆமி கலைக்குது
நாங்கள் துடிப்பதை சொல்லும் — புலி
நாளை நிலத்தினில் வெல்லும்
நாளை நிலத்தினை வெல்லும்
நீங்கள் எங்கள் துயரைச் சுமந்து காகங்களே...

எத்தனை காலமாய் எங்களைக் காத்தவர்
எங்களுக்காகவே தங்களைத் தேய்த்தவர்
எந்த நிலையிலுள்ளாரோ — அவர்
எப்ப இனி வருவாரோ
எப்ப இனி வருவாரோ — இதை
எரியும் நெருப்பில் மிதந்து காகங்களே...

பாடலாசிரியர்
புலமைப்பித்தன்

27

தமிழ்ப் பகை முடிக்க புலிப்படை கொண்ட
தனிப் பெரும் வீரத் தலைவன்
தமிழ்த் தாய் தவப்புதல்வன்
பிரபாகரன் தம்பி பிரபாகரன்
பிரபாகரன் தம்பி பிரபாகரன்

பொங்கி எழுகின்ற கடலவன்
புயலில் அணையாத சுடரவன்
தங்கத் தமிழர் தலை விதியவன்
தரணிக்கே பெரிய புதிரவன்
சிங்களக் கொலை வெறிப் படைகளை
திரும்பி ஓடவே செய்தவன்
அந்நியர் பிடியில் சொந்தமண்
என்றபின் அவனா ஓய்பவன்?
பிரபாகரன் தம்பி—

பேரினவாத வெறியினை
பொசுக்கும் புரட்சியாளனவன்
ஓரினம் என்றே உழைப்பவரை
அழைக்கும் சமதர்மவாதியவன்
தமிழீழத் தாயக விடுதலைத்
தாகத்தை நெஞ்சில் ஏந்தியவன்
புவி மீது தமிழன் பெருமையை
இனமானத்தால் நிலை நாட்டியவன்
பிரபாகரன் தம்பி—
தமிழ்ப் பகை முடிக்க—

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

28

உலகத் தமிழினமே எண்ணிப்பார் — நீ
உறங்கினால் வரலாற்றில்
யாருன்னை மன்னிப்பார்

எங்கேனும் உனக்கென்றோர்
அரசுண்டா காட்டு — தமிழ்
ஈழப்போர் வென்றேனும்
மானத்தை நாட்டு

உலகத் தமிழினமே —

நாடுகள் அனைத்தும் — நீ
கூலியாய் நடந்தாய்
நாலு பேருக்கும் — நீ
கேலியாய்க் கிடந்தாய்
கேடுகள் சூழ — நீ
அலைகடல் கடந்தாய்
கேட்பாரில்லாமல் நீ
ஊரூராய் மடிந்தாய்

உலகத் தமிழினமே —

விடுதலைப் புலிகள்
போர்க்களம் ஆடும்வேளை
வீணாகத் தமிழ்மாந்தர்
கழிப்பதோ நாளை
எடுகையில் நீயும் போய்
இன்றைக்கே வாளை
ஈழத்தில் வேங்கைக்கு
கொடு வந்து தோளை

உலகத் தமிழினமே —

வாழ்கின்ற நாளெல்லாம்
உனது தாய் நாடா?
வாடகை வீடென்ன
உன் சொந்த வீடா?
ஆளாமல் அலைகின்றாய்
ஆடா நீ மாடா?
அடிமையாய் இருக்கின்றாய்
நீ கெட்ட கேடா?

உலகத் தமிழினமே—



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

29

போர் இன்னும் ஓயவில்லை
ஓயவில்லை—— ஓயவில்லை...—
போர் இன்னும் ஓயவில்லை
எங்கள் தமிழீழ மண்ணில்
புலிகளின் ரத்தம் இன்னும் காயவில்லை
களத்தில் தானே நிற்கிறோம் — எங்கள்
கண்ணீரும் செந்நீரும தோய்ந்த
நிலத்தில் தானே நிற்கிறோம்

போர் இன்னும் ..

எங்கள் வீரர் கல்லறை மீதில்
மாற்றான் கொடி பறக்குமா? — அவர்
தங்கத் தமிழீழம் காணவே செத்தார்
நெஞ்சம் அதை மறக்குமா?

போர் இன்னும்—

விடுதலை காணும் நாள் வரை எங்கள்
துப்பாக்கி தூங்காது — புலிக்
கொடியை ஏற்றுவோம் ஒரு நாள்
எங்கள் குறிக்கோள் தப்பாது

போர் இன்னும்...

பாடலாசிரியர்
காசிமுத்து

30

கலிங்கத்துப் பரணியின் வீரமெங்கே — போர்
களப்புலிகள் நெஞ்சில் வாழுதிங்கே
ஆ...... ஓ— — ஆ.. — ஓ— —

கலிங்கத்து...

செங்களத்தில் சிங்களவன் பகை முடிக்க — அவன்
செங்குருதி சிந்துகிறான் நிலம் சிவக்க
வங்கக்கடல் பொங்கியதோ அவன் உருவில் — புது
வரலாறு படைக்கின்றான் புவியரங்கில்

கலிங்கத்துப்...

மங்கையரின் கரங்களில் குண்டு முழங்க — இளம்
மழலையர் நெஞ்சமதில் வீரம் விளங்க
இன மானம் தெரியுது ஈழ மண்ணிலே — நல்ல
எதிர்காலம் பிறக்குது அவன் கண்ணிலே

கலிங்கத்துப்...

தனித்தமிழ் ஈழமதில் கொடிபறக்கும் — என்றும்
தரணியில் தமிழ்வீரம் தான் சிறக்கும்
புலிப்படை பாயுதுபார் படை நடுங்க — புது
விடியலைப் படைக்குது இடி முழங்க

கலிங்கத்துப்...

பாடலாசிரியர்
காசிமுத்து

## 31

செந்தமிழ் வீரனடா
சீறிடும் வேங்கையடா
எங்கள் பிரபாகரன் — அவன்
இளந்தமிழ்த் தீரனடா

இனத்தின் விடுதலைக்கு
ஈழத்தை மீட்டிடவே
அவன் பிறப்பெடுத்தானடா — அதற்கே
ஆயுதமெடுத்தானடா

உலகம் முழுவதிலும்
உள்ள இளைஞர்க் கெல்லாம்
அவனொரு பாடமடா — அவன்
இலட்சிய தீபமடா

செந்தமிழ் ...

எத்தனை வலை விரித்தார்
என்னென்ன விலை பேசினார்
ஆண்புலி சிக்கவில்லையே — அவன்
அரசியல்வாதியில்லையே
விடுதலைத் தாகம் கொண்ட
வீரப் பிரபாகரன்
உயிர் விலை பேசுகின்றார் — அவனை
ஊரெல்லாம் தேடுகின்றார்

செந்தமிழ்...

காடு மலைகளிலும்
தகன வெளிகளிலும்
தேடி அலுத்துவிட்டார் — மனம்
தேம்பி அழுதும்விட்டார்

எங்கே இருக்கின்றானோ
இறைவனே அறிந்திடுவான்
இந்தியப் படை நடத்தும் வீரன்
இதயம் திறந்து சொன்னான்

செந்தமிழ் —

எங்கே இருந்திட்டாலும்
இளைஞனே நீடு வாழ்க
தமிழினம் பெற்றெடுத்த — வீர
தலைமகன் அவன் தானடா
வல்லரசுப் படைகள்
வந்து குவிந்திடினும்
வெற்றி ஈட்டிடுவான் — எங்கள்
வீரப் பிரபாகரன்

செந்தமிழ் —

* *

பாடலாசிரியர்
மெய்யப்பன்

32

தமிழீழம் பெறும் ஒருகாலம் வரும்
ஒன்றாகச் சேருங்கள் — இதை
நன்றாகக் கேளுங்கள்
பழி தீரும் நிலை உருவாகும் வரை
போர்ப் பாட்டுப் பாடுங்கள்
நல்லனார் பாட்டுப் போடுங்கள்

தமிழீழம்—

அடி உதை விழுமென்று அஞ்சுவதில்லை — இனி
அய்யா சாமி என்று கெஞ்சுவதில்லை
விடுதலை பெறும்வரை ஓயப்போவதில்லை — எந்த
வேங்கையும் நமைப்போல் பாய்வதில்லை
விடுதலை பெறும் வரை—

தமிழீழம்...

பனி மழை வெய்யிலென்று களைத்ததில்லை — கடும்
பகல் இரவென்று நாம் சலித்ததில்லை
இதுவரை உரிமையோ கிடைக்கவில்லை — நம்மை
இறைவன் அடிமையாய்ப் படைக்கவில்லை

தமிழீழம்...

வெறித்தனம் கொண்டே விரட்டுகிறார் — நிதம்
வேதனை தந்தே மிரட்டுகிறார்
சரித்திர உண்மையைப் புரட்டுகிறார் — பொய்
சான்றுகள் ஆயிரம் பிரட்டுகிறார்

தமிழீழம்...

பேதங்கள் பிளவுகள் விட்டிடுவோம் — பழம்
பெரும்புகழ் அதனை எட்டிடுவோம்
மோதுங்கள் என்றால் முட்டிடுவோம் — வெற்றி
முரசெடுத்தே நாம் கொட்டிடுவோம்

தமிழீழம்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

33

சொல்லில் அடங்காத கொடுமை
சொல்லுகிறேன் கேளுங்கள்

இரத்த மழையிலே மூழ்குதடா — எங்கள்
இன்னுயிர்த் தமிழீழம் — தமிழ்
இனத்தை மிதித்து வெறி ஆடுதடா — இங்கே
சிங்கள மத வேளம்

சொல்லில் அடங்காத...

சிங்களவனைப் போல் இங்குலகம் மீதில்
எங்குமொரு பாவியில்லை —
இங்கு அவன் வீசும் குண்டில் மடியுதுபார்
எங்கள் தமிழீழப் பிள்ளை

சொல்லில் அடங்காத...

கொடிய நெருப்பிலே எரியுதடா — தமிழ்
இனத்தின் குடியிருப்பு
நெடிய பனை மரங்கள் போலும் எழுந்தோங்கி
நிற்குதடா நெருப்பு

சொல்லில் அடங்காத...

நடுத்தெருவில் வைத்தே பிடித்து தமிழ்ப்பெண்ணை
கடித்து மகிழ்கிறான் பாவி
அடுத்த நொடியில் நஞ்சை குடித்து மரணத்தில்
துடித்து விழுகின்றாள் தேவி

சொல்லில் அடங்காத

பாடலாசிரியர்
புதுவை இரத்தினதுரை

பாடியவர்
ஜெயச்சந்திரன்

34

பொங்கிடும் கடற்கரை ஓரத்திலே — மழை
பொழிந்திடும் கார்த்திகை மாதத்திலே
மங்களம் தங்கிடும் நேரத்திலே நம்
மன்னவன் பிறந்தான் ஈழத்திலே
பொங்கிடும்...

பாசத்தில் எங்களின் தாயானான் — கவி
பாடிடும் மா பெரும் பேரானான்
தேசத்தில் எங்கணும் நிலையானான்
தேடியே வந்திடும் தலையானான்
பொங்கிடும்...

இன்னல் கண்டுமே தான் கொதித்தான் — பல
இளைஞரைச் சேர்த்துமே களம்குதித்தான்
தன்னின மானத்தை தான் மதித்தான் — பகை
தாவியே வந்திடக் கால் மிதித்தான்
பொங்கிடும்...

இங்கொரு தாயகம் மூச்சென்றான் — தமிழ்
ஈழமே எங்களின் பேச்சென்றான்
வந்திடும் படைகளை வீசென்றான் — புலி
வாழ்ந்திடும் வரையினில் தூசென்றான்
பொங்கிடும்...

விடுதலைப் புலிகளின் பலமானான் — தமிழ்
வீடுகள் யாவிலும் மலரானான்
படுகளம் மீதிலோர் புலியானான் — பிர
பாகரன் எங்களின் உயிரானான்
பொங்கிடும்...

என்றுமே எங்களின் தளபதியே — நீ
எங்களின் வான்வெத்து வளர்மதியே
இன்றுனக்காயிரம் சோதனைகள் — தமிழ்
ஈழத்தை வாங்கிடும் உன் போதனைகள்
பொங்கிடும்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| பி. சுசிலா | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

**35**

கண்மணியே கண்ணுறங்கு
காவியமே நீயுறங்கு
பொன்முடி சூடிய பூச்சரமே — எந்தன்
பூங்குயிலே இன்று கண்ணுறங்கு
கண்ணுறங்கு........ கண்ணுறங்கு

கண்மணியே ...

நாய்கள் குரைக்குது ராவினிலே — இந்தி
இராணுவம் போகுது வீதியிலே
வாய்கள் திறக்கவும் கூடாதாம் — எங்கள்
வாசலில் தென்றலும் வீசாதாம்
தீயினில் தாயகம் வேகுது பார் — எட்டுத்
திக்கிலும் போர்க்குரல் கேட்குது பார்
பாய்ந்திடும் வேங்கைகள் வீரத்தையே — நான்
பாலுடன் ஊட்டுவேன் வாயினிலே

கண்மணியே ...

செல்வந்த வேளையில் நீ பிறந்தாய் — இன்று
ஷெல்வந்து உன்னப்பன் போய் முடிந்தான்
வல்லவர் யாவரும் காட்டினிலே — கொடும்
வானரக் கூட்டங்கள் நாட்டினிலே
அப்பன் தமிழ்க் கவிவாணனடா — உன்
அண்ணன் ஒரு புலி வீரனடா
இப்போது மட்டுமே தூங்கிவிடு — தமிழ்
ஈழத்துக்காகவே வாழ்ந்துவிடு

கண்மணியே —

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| டி. எம். சௌந்தரராஜன் | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

**36**

நடந்து வந்தபாதை தன்னை திரும்பிப்பாரடா — நீ
நாசவேலை செய்தபின்பு வருந்துவாயடா
அடர்ந்த காட்டில் எரியும் தியாக நெருப்புத்தானடா
— உனை
ஆட்டுகின்ற சக்தியோடு எரிக்கும்தானடா
எதிரி காலில் ஏறி நின்று செருப்பு ஆகினாய் — தமிழ்
ஈழமண்ணை எண்ணை ஊற்றி
நெருப்பு மூட்டினாய்
கதிரை ஏறும் ஆசைகொண்டு
விலையுமாகினாய் — நம்
களத்து வீரர் போகும் போது
தலையுமாட்டினாய்

நடந்து...

தம்பிமாரை கொன்றவர்க்கு
வாழ்த்துப் பாடினாய் — உன்
தங்கை கற்பைத் தின்றவர்க்கு
மாலை சூடினாய்
நம்பி நின்ற எங்களுக்கு
நஞ்சை ஊட்டினாய்
நாளை வரும் அந்தநேரம்
கம்பிநீட்டுவாய்

நடந்து...

வீதியெங்கும் சாவினோடு
மக்கள் ஓடுறார் — புலி
வீரர் நின்று எதிரியோடு
யுத்தமாடுறார்

நீதியற்ற பகைவனோடு
கூட்டம் போடுறாய் — அவன்
நீட்டுகின்ற பதவியேற்று
ஆட்டமாடுறாய்

நடந்து...

பெற்றதாயை விற்றுக்காசு
பிழைக்கும் பேர்வழி — நீ
போகும் பாதை எந்த நாளும்
இல்லை நேர்வழி
அற்புதங்கள் நாளை
தமிழ் ஈழம் காணுவார் — எம்
அண்ணன் வந்து உங்களுக்குத்
தீர்ப்புக்கூறுவார்

நடந்து...



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| நாகூர்பாபு | இன்குலாப் | தேவேந்திரன் |

37

ஒப்புக்கு போர்த்திய
அமைதி திரையில்
ஓரங்கள் பத்தி எரிகின்றன.
ஒடுக்க முடியாத உண்மையின் குரல்கள்
உலகின் முற்றத்தில் ஒலிக்கின்றன
ஏழு கடல்களும் பாடட்டும் — இன்னும்
எட்டாத வானமும் கேட்கட்டும்
ஈழ விடுதலைப் புலிகளின் குருதியில்
எழுதப்படுகின்ற மானுட கானத்தை

ஏழுகடல்களும்....

ஆயிரம் பறவைகள்
எங்கள் கானக மரங்களில்
கூடு கட்டலாம்
அவைகள் உலக சமத்துவம்பாடி
எங்கள் தரைகளில் முட்டலாம்
போர்விமானம் எம் தலைக்குமேலெனில்
புகையும் எங்கள் துப்பாக்கி
போர்க்கப்பலெம் அலைக்குமேலெனில்
கடலே எதிரிக்கு சமாதி
இதை ஏழுகடல்களும் பாடட்டும்
இன்னும் எட்டாத வானமும் கேட்கட்டும்

ஏழுகடல்களும்....

| பாடியவர்கள் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| மனோ, வாணிஜெயராம் | புதுவை இரத்தினதுரை | தேவேந்திரன் |

38

ஆ:- தென்னங் கீற்றில் தென்றல் வந்து மோதும் எம்
தேசமெங்கும் குண்டு வந்து வீழும்
கன்னி மனம் மெல்ல மெல்ல மாறும் — அவள்
கையில் கூட ஆயுதங்கள் ஏறும்

தென்னங்...

பெ:- நிலவு வந்து பொழியும் நேரம்
நீ வரவில்லை — நான்
நீண்ட நேரம் காத்திருந்தேன்
பதில் தரவில்லை
ஊர் முழுதும் ஒலம் — நான்
உறங்கி வெகு காலம்
உறங்கி வெகு காலம் — நீ
ஓடி வந்தால் போதும்.

தென்னங்...

ஆ:- காவலுக்கு வந்த பேய்கள்
கடிக்கும் நாளையில் — ஒரு
காதல் என்ன மாலையென்ன
இந்த வேளையில்
எங்கள் புலிவீரர் — அவர்
இருக்குமிடம் போறேன்
இருக்குமிடம் போறேன் — தமிழ்
ஈழம் வந்தால் வாறேன்

தென்னங்...

பெ:- தென்றல் வந்து தொட்டு என்னை
கேலி செய்தது — நீ
சென்ற இடம் சொன்ன பின்பு
வேலி போட்டது

காலம் வந்து சேரும் — புலி
களத்தில் வாகை சூடும்
களத்தில் வாகை சூடும் — இனி
கழுத்தில் மாலை ஆடும்.

ஆ:- தங்கமேனி நொந்து ஈழத்
தாயழுகின்றாள் — எம்
தலைவன் இந்த நிலையைப் பார்த்து
தான் உருகின்றான்
எங்கள் மேனி சாகும் — இல்லை
எதிரி ஆவி போகும்
எதிரி ஆவி போகும் — தமிழ்
ஈழம் வந்து சேரும்.

தென்னங்...

பெ:- உன்னை நெஞ்சில் தூங்க வைத்துப்
பாட்டுப் பாடுவேன் — எம்
உரிமைக்காக நானும் வந்து
படையில் சேருவேன்
வேங்கை தோற்பதில்லை — நம்
வீரர் சாவதில்லை
வீரர் சாவதில்லை — எம்
விடிவு தூரமில்லை

தென்னங்...



*பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை*
--- | --- | ---
தேனிசை செல்லப்பா | புதுவை இரத்தினதுரை | தேனிசை செல்லப்பா

39

வானம் இடிந்து விழுந்திடலாம் - பெரும்
வாயு எழுந்து சுழன்றிடலாம்
ஈனர் படையெதிர் வந்திடலாம் — புலி
எந்த நிலையிலும் வென்றிடலாம்.

வானம் ...

எங்கள் தலைவனின் ஆணையிதுவெனில்
நஞ்சை விழுங்கியும் சாவோம் — நாம்
அஞ்சி அடங்கியே ஓயோம்
பொங்கி வரும் கடல் போல பகைவரும்
போதும் பணிந்திடமாட்டோம் — உயிர்
பிச்சையெனக் கைநீட்டோம்

வானம் ...

ஆயிரம் தோழர்கள் தீயினில் போயினர்
ஆயினும் போரது நீளும் — புலி
ஆடும் கொடி நிலம் ஆளும்
பேயிருள் சூழ்ந்திடும் கானகம் மீதினில்
பாசறை ஆயிரம் தோன்றும் — கரும்
பைகளும் ஆயுதம் ஏந்தும்

வானம் ...

எத்தனை வீரர்கள் செத்து மடிந்து தம்
ரத்தம் கொடுத்த போராட்டம் — இனி
இல்லை இதற்கு ஈடாட்டம்
மத்தளம் பேரிகை கொட்டு புலிப்படை
மாபெரும் வெற்றிகள் சூடும் — வந்த
வானரக் கூட்டங்கள் ஓடும்

வானம்...

| பாடியவர்கள் | பாடலாசிரியர் | இசை. |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா<br>சொர்ணலதா | புதுவைஇரத்தினதுரை | தேனிசை செல்லப்பா |

40

ஆ: துப்பாக்கிச் சத்தங்கள் கேட்கும்
ராவில் செல்வந்து எங்களைத் தாக்கும்

பெ:- துப்பாக்கிச் சத்தங்கள் கேட்கும்
ராவில் செல்வந்து எங்களைத் தாக்கும்

ஆ:- தப்பேதும் செய்யாத போதும் எங்களை
சிப்பாய்கள் தாக்கிடக்கூடும் — தமிழ்
ஈழத்திற் சா விளையாடும்
துப்பாக்கி...

பெ:- தென்றலில் ஆடிய பூங்கொடி — அந்நிய
தீயினில் வெந்திடலாமோ
(மீண்டும்)

ஆ:- தமிழ் அன்னையின் கற்பினை
ஆதிக்க சக்திகள் அள்ளியே தின்றிடலாமோ
அள்ளியே தின்றிடலாமோ
துப்பாக்கி ..

பெ:- சின்னஞ்சிறுமலர் கிண்கிணிப் பாதங்கள்
தெருவிற் கிடந்திடலாமோ
தெருவிற் கிடந்திடலாமோ

ஆ:- கரும் பின்னலசைந்திட செல்லும் இளசுகள்
பூவை இளந்திடலாமோ
பூவை இளந்திடலாமோ
துப்பாக்கி ..

பெ:- ரத்தம் கொதித்திடும் சித்தம் படைத்தவர்
யாருளர் யாவரும் கேளீர்
யாருளர் யாவரும் கேளீர்

ஆ:- புலி செத்து மடிந்திடப்போவதில்லை
தமிழ் ஈழம் படைத்திட வாரீர்
துப்பாக்கி

பெ:- தாயகம் மீட்டிடும் போரிலே ஆயிரம்
தானைகள் மாண்டிடக் கூடும்
தானைகள் மாண்டிடக் கூடும்

ஆ:- எங்கள் காவிய நாயகன் காட்டிடும் பாதையில்
ஆயிரம் வேங்கைகள் பாயும்
ஆயிரம் வேங்கைகள் பாயும்
துப்பாக்கி



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | புதுவை இரத்தினதுரை | தேனிசைசெல்லப்பா |

41

வாருங்கள் வீரர்களே ஒன்றாய்
சேருங்கள் தோழர்களே
போகும் வழி வெகு தூரமில்லை
சாவு எமக்கொரு பாரமில்லை
போகும் .

இங்கு புதுயுகம் பூக்கும் பூக்கும்
இன்னல்கள் யாவையும் தீர்க்கும் தீர்க்கும்
சங்கை பிறந்திடும் சண்டைகள் நீண்டிடும்
சாவில் எழுதிய சாதகம் மாறிடும்
வாருங்கள் .

காற்று விரைவினில் மாறும் மாறும்
கப்பல் கரையினில் சேரும் சேரும்
ஆற்றல் மிகுந்தவர் ஆயுதமேந்துங்கள்
அண்ணனை நம்பியோர் ஆசிகள் கூறுங்கள்
வாருங்கள் ..

நெஞ்சினில் குண்டுகள் பாயும் பாயும்
நிச்சயம் ஷெல்கள் கூவும் கூவும்
பிஞ்சுடன் பூக்களும் போர்க்களம் வாருங்கள்
புலிக்கொடி ஆடிடும் பாசறை சேருங்கள்
வாருங்கள்....

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | புதுவை இரத்தினதுரை | தேனிசை செல்லப்பா |

## 42

வானுயர்ந்த காட்டிடையே
நானிருந்து பாடுகிறேன்
வயல் வெளிகள் மீதுகேட்குமா — இது
வல்லைவெளி தாண்டிப் போகுமா

வானுயர்ந்த

நாளையொரு குண்டு வைத்து
நெஞ்சில் துளை போடக்கூடும்
ஆளைக் கொல்லும் நஞ்சைக்கூட
அள்ளித்தின்று சாகக்கூடும்
எந்த நிலை வந்து சேருமோ — எனக்கு
எப்ப வந்து சாவு கூடுமோ

வானுயர்ந்த

நான் சரியும் மண்ணில் நாளை
பூமலர்ந்து ஆடக்கூடும்
தேனெடுக்கும் ஈக்கள் கூட்டம்
தேடிவந்து பாடக்கூடும்
எந்த நிலை வந்துசேருமோ — அதை
இந்த விழி பார்க்கக்கூடுமோ

வானுயர்ந்த ..

நாளை தமிழ் ஈழமண்ணில்
நாங்கள் அரங்கேறக்கூடும்
மாலை கொடியோடு எங்கள்
மன்னன் சபை ஏறக்கூடும்
இந்தநிலை வந்து சேருமோ — அதை
எந்தன் விழி காணக்கூடுமோ

வானுயர்ந்த ..

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | இன்குலாப் | தேனிசை செல்லப்பா |

43

கானம் ரத்தகானம்
கானம் ரத்தகானம்
வீசும் காற்றே சுடுகிறது
கரையில் மோதும் அலைகள் எல்லாம்
கனலை இறைக்கிறது

கானம் ..

வெடித்துச் சிதறும் இதயங்களங்கே
வெம்பி இசைத்திடும் விடுதலைக் கானம்
துடிக்கும் இதயம் எனக்கிருந்தால் உன்னை
தூங்கவிடாதந்த ரத்தகானம்

கானம் ..

ஈழத்திலிருந்து நீளும் கரங்களை
தோழமை கொள்வதெம் பிறப்புரிமை
கோழியின் செட்டைக்குள்
குஞ்சுகள் அடங்கும்
பாழும் கழுகுக்கு பாசமா புரியும்

கானம் .

ஈழம் வெல்வது புலிகளின் உரிமை
ஏற்றுக் கொள்வது எங்களின் கடமை
வாலை ஆட்டாதே இந்திய அரசே
வரிப்புலி முழக்குவார் விடுதலை முரசே

கானம்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 44

எங்கள் தோழர்களின் புதை குழியில்
மண்போட்டுச் செல்கின்றோம்
இவர்கள் சிந்திய குருதி — தமிழ்
ஈழம் மீட்பது உறுதி

**எங்கள்** ...

இளமை நாளின் கனவை எல்லாம்
எருவாய் மண்ணில் புதைத்தவர்கள்
போர்க்களம் படைத்து தமிழ் இனத்தின்
கருத்தில் நெருப்பை விதைத்தவர்கள்

**எங்கள்** ...

வாழும் நாளில் எங்கள் தோழர்
வாழ்ந்த நாளை நினைக்கின்றோம் — எம்
தோழர் நினைவில் மீண்டும் போரில்
துப்பாக்கிகளை அணைக்கின்றோம்

**எங்கள்** ...

தாவிப்பாயும் புலிகள் நாங்கள்
சாவைக் கண்டு பறப்போமா
பூவாய் பிஞ்சாய் உதிரும் புலிகள்
போன வழியில் மறப்போமா

**எங்கள்** ...

பாடியவர் — தேனிசை செல்லப்பா, சொர்ணலதா
பாடலாசிரியர் — புதுவை இரத்தினதுரை
இசை — தேனிசை செல்லப்பா

45

ஆ:- யாகம் தொடங்்கிவிட்டோம் — ஒரு
வேள்வி தொடங்கிவிட்டோம்
யாகம் தொடங்கிவிட்டோம்
ஒரு வேள்வி தொடங்கிவிட்டோம்

பெ: யாகம் தொடங்கிவிட்டோம் — ஒரு
வேள்வி தொடங்கிவிட்டோம்
யாகம் தொடங்கிவிட்டோம்
வேள்வி தொடங்கிவிட்டோம்

பெ:- ரத்த அருவியில் நாங்கள் குளித்தொரு
யாகம் தொடங்கிவிட்டோம்

ஆ:- வீரர்கள் சூழ்ந்தனர் காவலில் நின்றனர்
வேள்வி தொடங்கிவிட்டோம்

இருவர்:- யாகம்

பெ:- பூங்குயில் பாடிய மேடையில் நாமொரு
பூசை தொடங்கிவிட்டோம்

ஆ:- விழி ஏங்கிடும் வாழ்வினை காணும்வரை
இனி ஏதும் மறந்து விட்டோம்

இருவர்:- யாகம்

பெ:- வானரச் சேனைகள் சேதனைதாண்டியே
வந்து குவிந்திடலாம்

ஆ:- எம் கானகப் பாசறை வீரரின்கால்களில்
தூசெனப் போய்விழலாம்

இருவர்:- யாகம்

பெ:- வேங்கைகள் மூட்டிய வேள்வியில் ஆயிரம்
வீரர்கள் போயிடலாம்

ஆ:- புலி ஏந்திய ஆயுதப்போரிலே
தாயகம் வாங்கி மகிழ்ந்திடலாம்

இருவர்:- யாகம்...

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
| --- | --- | --- |
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 46

தங்கத் தமிழும் தமிழீழ மண்ணும்
எங்களிரு விழிகள் — நாங்கள்
விடுதலைப் புலிகள்
நாங்கள் விடுதலைப் புலிகள்
எங்கள் தமிழீழ மண்ணை — தமிழை
எதிர்ப்பவன் தலையெடுப்போம் — களத்தில்
உயிரையும் கொடுப்போம்

தங்கத்...

வீட்டை உறவை வெறுத்து வாழ்ந்தோம்
விலங்கு சுமந்து நடப்போமா
நாட்டை காக்க மறந்து நாங்கள்
நடைப்பிணம் போல் கிடப்போமா

தங்கத்...

கண்கள் எதிரில் குண்டு விழலாம்
களத்தில் நாங்கள் மாழலாம்
என்ன நடந்தாலும் எங்கள் மண்ணை
நாங்கள் தானே ஆளலாம்

தங்கத்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

## 47

ஆயிரம் ஆயிரம் படைவந்தாலும்
ஆட்கள் தொகையா வெல்லும்
அறமும் வீரமும் வெல்லும்
பாயும் புலிகள் விடுதலைப் போரில்
யார்பக்கம் தம்பி வெல்லும்
கண்ணிவெடி பதில் சொல்லும்

ஆயிரம்...

கழுத்தில் நஞ்சை கட்டிய புலிகள்
களங் கண்டஞ்சியதுண்டா — எங்கள்
நிலத்தில் புலிகள் எதிரியை அடித்த
நிகழ்வு ஒன்றா? இரண்டா?

ஆயிரம்...

எங்கள் விடுதலை
உணர்வை மண்ணில்
எந்தப்படை வந்து அழிக்கும் — அட
பொங்கும் தமிழீழ மண்ணை தொட்டுப்பார்
புலிப்படை உன்னைக் கிழிக்கும்

ஆயிரம்...

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

8

நெஞ்சம் மறக்குமா நெஞ்சம் மறக்குமா
நெஞ்சம் மறக்குமா
வல்வெட்டித் துறையில் நாங்கள்
வளர்த்த சிதை நெருப்பில்
பன்னிரண்டு புலிகள் ஒன்றாய் படுத்ததை
நெஞ்சம் மறக்குமா — படுத்ததை
நெஞ்சம் மறக்குமா

குமரப்பா புலேந்தி அப்துல்லா
ரகு நளன் பழனி
மிரேஸ் றெஜினோல்ட் தவக்குமார்
அன்பழகன் கரன் ஆனந்தக்குமார்
எங்கள் தலைவர்கள் எங்கள் வீரர்கள்
இவர்களல்லவா
கண்கள் மூடி எங்கள் புலிகள் மாண்ட
கதையைச் சொல்லவா
தங்கத்தமிழீழ விடுதலை காண
நெஞ்சம் துடித்தாரே
சிங்கள இந்திய அரசுகள்சதியால்
நஞ்சைக் குடித்தாரே

வல்வெட்டித்துறை...

ஈழத்தமிழன் தமிழீழக் கடலில்
போனால் பிடிப்பாராம்
இந்திய உதவி கொண்டே தமிழன்
வாழ்வை முடிப்பாராம்?
ஆழக்கடலில் போன புலிகளை
பிடித்து சென்றாரே
அழகும் இளமையும் பொங்கும் வயதில்
துடிக்கக் கொன்றாரே

வல்வெட்டித்துறை...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| வாணி ஜெயராம் | புதுவை இரத்தினதுதுரை | எல். வைத்தியநாதன் |

49

நல்லூரின் வீதியில்
நடந்தது யாகம்
நாலுநாள் ஆனதும்
சுருண்டது தேகம்
தியாகத்தின் எல்லையை
மீறிய பிள்ளை
திலீபனை பாடிட
வார்த்தைகள் இல்லை...

பாடும் பறவைகள் வாருங்கள் — புலி
வீரன் திலீபனைப் பாடுங்கள்
யாகத்தில் ஆகுதி ஆனவன் — நாமத்தை
ஆயிரம்... ஆயிரம்... ஆயிரம்...
காலங்கள் பாடுங்கள்
ஆயிரம் ஆயிரம் ஆயிரம்...
காலங்கள் பாடுங்கள்

பாடும் —

இந்திய ஆதிக்க ராணுவம் வந்தது
நீதிக்கு சோதனை தந்தது — நாங்கள்
சிந்திய ரத்தங்கள் காய்ந்திடும் முன்னரே
கால்களில் வீழ் எனச் சொன்னது
வேங்கைகள் இதை தாங்குமா
குண்டு ஏந்திய நெஞ்சுகள் தூங்குமா
வீரன் திலீபன் வாதாடினான் — பசித்
தீயில் குதித்துப் போராடினான்

பாடும்...

வாயில் ஒருதுளி நீரதும் இன்றி
வாசலில் பிள்ளை கிடந்தான்
நேரு பேரனின் தூதுவன்
ஏனெனக் கேட்காது
ஆணவத்தோடு நடந்தான்
சாவினில் புலி போனது
தமிழீழமே சோகமாய் ஆனது
பார்த்து மகிழ்ந்தது ராணுவம் — புலிச்
சாவுக்கு ஆதிக்கம் காரணம்

பாடும்...

அந்நிய நாடிது ஆயினும் நீயிங்கு
ஆதிக்கம் செய்திட வந்தாய்
மன்னன் திலீபனின் கோரிக்கை யாவையும்
ஏளனம் செய்துமே சென்றாய்
தாகத்தோடு புலிபோனது — தமிழ்
சந்ததியே சூடு கண்டது
நெஞ்சினில் ரத்தம் வழிந்தது — உந்தன்
ஒப்பந்தம் இங்கு கிழிந்தது

பாடும்



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| மலேசியா வாசுதேவன் | காசி ஆனந்தன் | எல். வைத்தியநாதன் |

## 50

போடா தமிழா போடா
கரும்புலி மில்லர் காட்டிய வழிநீ
போடா தமிழா போடா
போடா..

சாவு வரும்வரை காத்திருப்பது சோம்பேறித்தனம்
உன் தாயகம் வாழ சாவை நீதேடு
வாழும் தமிழினம் — உன்
தாயகம் வாழ சாவை நீதேடு
ஆளும் தமிழினம்
போடா தமிழா –

நெல்லியடியிலே மில்லர் தன்சாவை
வண்டியில் ஏற்றிப் பறந்தானே
பொல்லா வெறியர்கள் சாகத்தன்னுயிரை
போக்கி மின்னலாய் மறைந்தானே
போடா தமிழா...

வளரும் காலத்தில் மலரும் காலத்தில்
வசந்த காலத்தில் விழுந்த மரம்
இளைய மாவீரன் மில்லர் தியாகந்தான்
இன்பத் தமிழீழம் கொண்டு வரும்
போடா தமிழா ..

பாயும் புலியாய் நீ மாறும் வாழ்வுதான்
பகைவர் கூட்டத்தை வெளியேற்றும்
தாய் மண்வாழ நீ தாங்கும் சாவுதான்
தமிழன் என்றுன்னைப் பறைசாற்றும்
போடா தமிழா...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| மலேசியா வாசுதேவன் | புதுவை இரத்தினதுரை | |
| வாணி ஜெயராம் | | எல். வைத்தியநாதன் |

## 51

ஆ:- மேகங்கள் இங்கு வாருங்கள்
எங்கள் விடுதலைக்கீதங்கள் கேளுங்கள்

பெ:- மேகங்கள் இங்கு வாருங்கள்
எங்கள் விடுதலைக்கீதங்கள் கேளுங்கள்

ஆ;- கானகத்தில் எங்கள் காவியங்கள் — படும்
வேதனையைச் சென்று பாருங்கள்

பெ:- கானகத்தில் எங்கள் காவியங்கள் படும்
வேதனையைச் சென்று பாருங்கள்

ஆ:- காற்றும் உறங்கிடும் நாட்கள் இருக்கலாம்
காடு உறங்குவதில்லை — தமிழ்
ஈழமெனும் திருநாடுவரும்வரை
வேங்கைகள் தூங்குவதில்லை

பெ:- தமிழ் ஈழமெனும் திருநாடுவரும்வரை
வீரர்கள் ஓய்வதுமில்லை

ஆ:- கானகத்தில்......

பெ:- கானகத்தில்......

இருவர்:- மேகங்கள்......

ஆ:- சிங்கள ராணுவப் பாசறையும்
வந்த இந்திய ஆதிக்க ராணுவமும்
தலையாட்டிகளின் கொலை வேட்டைகளும்
இன்று ஆள்வதுதான் தமிழ் ஈழமண்

பெ;- சிங்கள ராணுவப் பாசறையும்
வந்த இந்திய ஆதிக்க ராணுவமும்
தலையாட்டிகளின் கொலை வேட்டைகளும்
இன்று ஆழ்வது தான் தமிழ் ஈழமண்

ஆ:- வேங்கைகள் இங்கு தூங்குமா? — தமிழ்
ஈழத்தின் வேதனை நீங்குமா?

பெ:- வேங்கைகள் இங்கு தூங்குமா? — தமிழ்
ஈழத்தின் வேதனை நீங்குமா?

ஆ:- தமிழ் ஈழமெனும் திருநாடுவரும்வரை
வேங்கைகள் தூங்குவதில்லை

பெ:- தமிழ் ஈழமெனும் திருநாடுவரும்வரை
வீரர்கள் ஓய்வதுமில்லை

ஆ:- கானகத்தில்...

பெ:- கானகத்தில் .....

இருவர்:- மேகங்கள் ...

ஆ: சேதணைதாண்டிய வானரங்கள் — இங்கு
செய்திடும் கூத்துக்கள் ஆயிரங்கள்
கைக்கூலிகளின் கொடும் வேலைகளால்
எங்கள் தாயகம் வேகுது தீயினில்

பெ;- சேதணை தாண்டிய வானரங்கள் — இங்கு
செய்திடும் கூத்துக்கள் ஆயிரங்கள்
கைக்கூலிகளின் கொடும் வேலைகளால்
எங்கள் தாயகம் வேகுது தீயினில்

ஆ:- கானகம் தீயில் வேகுமா? — எங்கள்
கரும்புலி எதிரிமேல் பாயுமா?

பெ:- கானகம் தீயில் வேகுமா? — எங்கள்
கரும்புலி எதிரிமேல் பாயுமா?

ஆ;- தமிழ் ஈழமெனும் திருநாடுவரும்வரை
வேங்கைகள் தூங்குவதில்லை

பெ:- தமிழ் ஈழமெனும் திருநாடுவரும்வரை
வீரர்கள் ஓய்வதுமில்லை

ஆ:- கானகத்தில்... —
பெ: கானகத்தில் ... —
இரு:- மேகங்கள் ... ...
ஆ:- ஊர்மனை யாவிலும் வேதனைகள் — இந்தி
ஊர்வலம் போலவே சோதனைகள்
வந்த ராணுவத்தின் வெறியாட்டங்களால்
எங்கள் வாசலில் சாக்குரல் கேட்குது
பெ:- ஊர்மனை யாவிலும் வேதனைகள்
இந்தி ஊர்வலம் போலவே சோதனைகள்
வந்த ராணுவத்தின் வெறியாட்டங்களால்
எங்கள் வாசலில் சாக்குரல் கேட்குது

ஆ:- தாயகம் வந்து சேருமா? — புலி
தாகங்கள் நாளையே தீருமா?
பெ:- தாயகம் வந்து சேருமா? — புலி
தாகங்கள் நாளையே தீருமா?

ஆ:- தமிழ் ஈழமெனும் — —
பெ:- தமிழ் ஈழமெனும் ... —
ஆ:- கானகத்தில் எங்கள் ... ...
பெ:- கானகத்தில் எங்கள் ... —
இரு:- மேகங்கள் ... ...



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தீபன் சக்கரவர்த்தி | காசி ஆனந்தன் | எஸ் வைத்தியநாதன் |

52

இந்திய அரசே
உன் படையைத் திருப்பு
செந்தமிழ் ஈழத்தின் நெஞ்சில் வெடித்தது
நெருப்பு ...

இந்திய...

எங்கள் வீட்டில் குழந்தைகூட — ஓர்
குண்டை கையில் தூக்கும்
நாங்கள் தங்கும் காட்டில் மரங்கள் கூட
உன் தலையை துண்டாக்கும்

இந்திய...

புயலின் நடுவிலே பட்டம் விடுகிறான்
எங்கள் மண்ணில் உன் சிப்பாய்
நாங்கள் உயிரை விட்டாலும்
இனை விட மாட்டோம் — இதை
உன் நெஞ்சில் நீ வைப்பாய்

இந்திய...

வீரவிடுதலைப் புலிகள் உலாவரும்
வீதி தமிழீழ வீதி
எங்கள் ஊரில் இனியும் நீயிருந்தால் — இங்கேயுன்
படையில் இருக்காது பாதி

இந்திய...

பொறுமை எத்தனை காலம் பொறுத்திடும்
பொங்குது பார் தமிழ் ஈழம் — உன்
வெறியர் படை இங்கு வெல்லுமா — இல்லை
விரைவில் பதில் சொல்லும் காலம்

இந்திய...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| ராகவேந்தர் | புதுவை இரத்தினதுரை | எல். வைத்தியநாதன் |

**53**

வந்தது இந்திய ராணுவம்
ராணுவம்... ராணுவம்... ராணுவம்... அது
தந்தது துன்பங்கள் ஆயிரம்
ஆயிரம்.. ஆயிரம்..
என்ன உரிமையில் எங்களைத் தொட்டாய்
ஏனிங்கு மக்களை இப்படிச் சுட்டாய்
எங்களிற்கு பதில்கூறு — இல்லை
இப்பொழுதே வெளியேறு — இது
வேங்கைகள் விளைகின்ற நாடு — உந்தன்
வேசங்கள் கலைந்தது ஓடு......

குழு: வந்தது இந்திய...

அரிசி வந்த படகில் தமிழன்
குருதி கொண்டு போனாய்
எரியும் ஈழத் தமிழர் பெண்கள்
இளமை தின்னலானாய்
உதவி செய்ய வந்ததாக
முதலில் கூறலானாய்
உயிரைக் கொன்றதோடு — எங்கள்
உரிமை மீறலானாய்
கண்டங்கள் விட்டு
குண்டுகள் கொட்டும் வல்லரசா — உந்தன்
அண்டையில் உள்ள
ஆட்சிகள் யாவும் சிற்றரசா?
ஆதிக்கம் உன்னைப் பாதிக்கும்
எங்கள் அற்புத வேங்கைகள் சாதிக்கும்
இது வேங்கைகள் விளைகின்ற நாடு — உந்தன்
வேசங்கள் கலைந்தது ஓடு

வந்தது இந்திய ...

கால நேரம் பார்த்து எங்கள்
கதவைத் தட்டிக் கொண்டாய்
களத்தில் நின்ற புலியைக் கொன்று
கழுதை ஆள வைத்தாய்
ஈழம் வந்து சேரும் வேளை
இங்கு வந்து சேர்ந்தாய்
இரக்கமின்றித் தமிழர் நெஞ்சில்
இரத்தம் பாயச் செய்தாய்
அந்நியன் தமிழ் மண்ணிலே வந்து
ஆளுவதா — எங்கள்
மன்னவர் இனம் குண்டுகள் பட்டு
மாளுவதா?
கொன்றது போதும் சென்றிடு — புலிக்
குட்டிகள் இங்கு வென்றது
இது வீரப்புலிப்படை நாடு — உன்னை
வாவெனக் கூப்பிட்டதாரு...

வந்தது இந்திய...

ஆளவேண்டும் என்று நாங்கள்
ஆசை கொண்டதில்லை
அன்னை பூமி அண்டை நாட்டின்
அடிமை ஆவதில்லை
தாளம் போட்டு ஏவல் செய்ய
வேங்கை நின்றதில்லை
தாவிப்பாயும் புலிகள் என்றும்
கோழையானதில்லை
கானகம் வெற்றி காணிடும்
புதுக்காலமடா — புலித்
தானைகள் எதிர்ச் சேனைகள்
நோக்கிப் பாயுமடா
இந்தியா இங்கு வந்தியா — தமிழ்
ஈழத்தில் துயர் தந்தியா?
இது வேங்கைகள் விளைகின்ற நாடு
உந்தன் வேசங்கள் கலைந்தது ஓடு

வந்தது இந்திய...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| வாணி ஜெயராம் | பங்காரு | எல். வைத்தியநாதன் |

**54**

வீரன் மண்ணில் புதையும்போது
விதையாய் தானிருப்பான்
நாளைப்போரில் பகையை மாய்க்க
ஆயிரம் தோற்றுவிப்பான்
புலிகளை சாய்த்தாலும் — ஏந்தும்
துவக்குகள் சாயாது

வீரன் —

தாயின் மடியில் ஆடும் கால்கள்
துள்ளி ஓடிவரும்
பூவின் விரல்கள் குதிரைமீட்ட
பயணம் தொடர்ந்து விடும்
ஏந்திடும் துவக்கு வீழ்ந்திடும் முன்னே
புதுக்கரங்கள்.. அதை ஏந்தும்

வீரன்...

தியாகச் செந்நீர் சீறிடும் மழையில்
சூழும் தீ அவியும்
பாவ மக்கள் வாழ்வை மாற்றும்
பாதை தெரியவரும்
ஆதவன் வரவை அறிந்த பின்பே
விண்மீன்கள் துயில் கொள்ளும்

வீரன்...

*பாடியவர்* *பாடலாசிரியர்*
**மலேசியா வாசுதேவன் குழுவினர்** **புதுவை இரத்தினதுரை**

**இசை**
**எல். வைத்தியநாதன்**

**55**

புலிவீரர் புலிவீரர் உருவாகுகின்றார்
புயலோடு போராடும் புலியாகின்றார்
சதிகாரப் படையோடு களமாடுகின்றார்
சலியாத மனமோடு போராடுகின்றார்
புலிவீரர்...

தர்மத்தின் பெயர் சொல்லும் யுத்தம் — தமிழ்
ஈழத்தை பெற எங்கள் ரத்தம்
அதர்மத்தின் அடிவேரை அடியோடு சாய்க்கின்ற
புயலாகி வந்த எங்கள் யுத்தம் — நாளை
பூபாளமாகும் எங்கள் சத்தம்
பூகம்பம் இங்கே ஆரம்பம் ஆனது
புலிப்படை கடும் புயலாகி எழுந்தது
புதுயுகம் நாளை பிறந்திடும் — எங்கள்
புலிக்கொடி வானில் பறந்திடும்
புலிவீரர்...

குழு:- தானைத் தலைவனின் ஆணைபிறந்திடும்
தப்பிப் பிழைத்தெதிர்ச் சேனை பறந்திடும்
வானம் இடிபடும் வரைகள் பொடிபடும்
வழியில் எதிர்படும் படைகள் மிதிபடும்
மிதிபடும் மிதிபடும்...

தனி:- பூகம்பம் இங்கே ஆரம்பமானது
புலிப்படை கடும் புயலாகி எழுந்தது
புதுயுகம் நாளை பிறந்திடும் — எங்கள்
புலிக்கொடி வானில் பறந்திடும்
புலிவீரர்...

குழு;- சேரும் இடத்தினை எங்கள் சேனை அடைந்திடும்
வேங்கை புறப்படும் வீரம் விளைந்திடும்
வேகம் மிகுந்திடும் போர்கள் நடத்திடும்
செய்தி வந்திடும் தமிழ் ஈழம் கிடைத்திடும்
ஈழம் கிடைத்திடும் — எங்கள்
ஈழம் கிடைத்திடும்

தனி:- புதுயுகம் நாளை பிறந்திடும் — எங்கள்
புலிக்கொடி வானில் பறந்திடும்

புலிவீரர் —

தீயில் குளித்திடும் தேசம் குளித்திடும்
தீரன் திலீபனின் தேகம் சிலிர்த்திடும்
பாயும் புலிகளின் தாகம் அடங்கிடும்
பாடும் கவிக்குலம் பரணி எழுந்திடும்
எங்கள் புலிக்கொடி
வானில் பறந்திடும்
எங்கள் புலிக்கொடி வானில் பறந்திடும்
எங்கள் புலிக்கொடி வானில் பறந்திடும்



*பாடலாசிரியர்* — *இசை*
புதுவை இரத்தினதுரை — எல் வைத்தியநாதன்

*பாடியவர்*
மலேசியா வாசுதேவன், வாணி ஜெயராம்

56

ஆ:- பரணி பாடுவோம் பரணி பாடுவோம்
புதியதானதோர் பரணி பாடுவோம்

பெ:- தரணி போற்றிடும் புலிகள் மீதிலே

குழு:- தரணி போற்றிடும் புலிகள் மீதிலே

பெ:- கவிஞர் யாவரும் பரணி பாடுவோம்

குழு:- கவிஞர் யாவரும் பரணி பாடுவோம்

பரணிபாடுவோம்...

ஆ:- கலிங்கம் மீதிலே படைகள் பாய்ந்திட
பழைய பாவலன் பரணி பாடினான்

பெ:- புலிகள் பாய்ந்திடும் களங்கள் வாழ்ந்திடும்
புதிய பாவலர் பரணி பாடுவோம்

குழு:- புலிகள் பாய்ந்திடும் களங்கள் வாழ்ந்திடும்
புதிய பாவலர் பரணி பாடுவோம்

பரணிபாடுவோம்...

ஆ:- புயல் எழுந்த எம் பூமிபாடுவோம்
புலி பிறந்ததை பாடி ஆடுவோம்

பெ:- அயல் விடிந்தது என்று பாடுவோம்
அன்றி வேறெதை நாங்கள் பாடுவோம்

குழு:- அயல் விடிந்தது என்று பாடுவோம்
அன்றி வேறெதை நாங்கள் பாடுவோம்

பரணிபாடுவோம்...

ஆ:- குண்டு பாய்ந்திடும் நெஞ்சு பாடுவோம்
குலைந்திடாதவர் உறுதி பாடுவோம்

பெ:- தொண்டு சேவகம் செய்திடாதவர்
தோள்கள் போற்றி ஓர் பரணி பாடுவோம்

குழு:- தொண்டு சேவகம் செய்திடாதவர்
தோள்கள் போற்றி ஓர் பரணிபாடுவோம்

பரணிபாடுவோம்...

ஆ:- பகை அடித்திடும் வகையைப் பாடுவோம்
பாசறைகளின் மீது பாடுவோம்

பெ:- திசைகள் எங்கணும் புலிகள் என்பவர்
தீரர் என்றிடப் பரணிபாடுவோம்

குழு: திசைகள் எங்கணும் புலிகள் என்பவர்
தீரர் என்றிடப் பரணிபாடுவோம்

பரணிபாடுவோம்...

ஆ;- உலகம் யாவுமே உறங்கும் வேளையில்
உறங்கிடாத நம் புலிகள் பாடுவோம்

பெ:- தமிழர் என்றிடும் புலவர் யாவரும்
தம்பிமீதிலோர் பரணிபாடுவோம்

குழு:- தமிழர் என்றிடும் புலவர் யாவரும்
தம்பிமீதிலோர் பரணிபாடுவோம்

பரணிபாடுவோம்—



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| சாந்தன் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

57

குயிலேபாடு குயிலேபாடு
காலை விடிந்ததென்று
குயிலேபாடு — எங்கள்
கவலை முடிந்ததென்று பாடு
சோலை மலர்ந்தது சுகந்தம் எழுந்தது
துணிவுடன் வேங்கை அணியொன்று பிறந்தது
குயிலே...

குண்டு பொழிந்தது வானம் — கடல்
குருதி போலவே ஆகும்
தங்கத்தமிழர்கள் காவின் மடியினில்
இங்கு மடிந்தனர் நேற்று — இப்போ
எங்கள் திசையினில் காற்று — புலி
எழுந்து வந்ததைக் காட்டு — இனி
எதிரி வாசலில் பூட்டு குயிலே...

எங்கள் தலைவனின் மூச்சு — தமிழ்
ஈழமென்பதாய் ஆச்சு
பொங்கி எழுந்தவன் போரில் குதித்தபின்
புலிகளாயினர் தமிழர் — இதில்
பொசுங்கிப் போயினர் பகைவர் இனி
எங்கும் எழும்புவர் புலிகள் — விழும்
எதிரிப்படைகளின் தலைகள் குயிலே

கழுத்தில் ஆடுது நெஞ்சு — போர்க்
களத்தில் ஆடுது நெஞ்சு
விழுத்த முடியுமா வேங்கை வீரரை
விழுந்தும் எழும்புவர் புலிகள் — பகை
விரட்டி எடுப்பரே புலிகள் — இனிப்
பழுத்து விழுந்திடும் கனிகள் — புதுப்
பரணி எழுதுவர் கவிகள் குயிலே

*பாடியவர்* — சியாமளா | *பாடலாசிரியர்* — புதுவை இரத்தினதுரை | *இசை* — கண்ணன்

58

பால்மணம் மாறாத பிஞ்சுகள் — பிர
பாகரன் வளர்க்கின்ற குஞ்சுகள்
நாளை இக் குஞ்சுகள் கூவிடும் — தமிழ்
நாடொன்று ஆக்கிடப் போரிடும்

பால்மணம்...

பள்ளிக்குப் போகின்ற நேரத்தில் — இவர்
பாசறை வந்தது வீரத்தில்
முள்ளிலும் கல்லிலும் தூங்கிறார் — பசி
மூடவும் போர்க்களம் ஆடுறார்

பால்மணம் —

போரிடும் வேளையில் சாகிறார் — உயிர்
போகினும் சரித்திரம் ஆகிறார்
வேருக்கு நீராக ஓடுகிறார் — பெரும்
வேங்கைகளாகவே மாறுறார்

பால்மணம் ..

எங்களின் பிள்ளைகள் விழுவரா — பகை
இவர்களை மீறியும் வருவரா
வெங்களம் வேங்கைக்கு புதியதா — சின்ன
வீரர்கள் வெற்றிகள் பெறுவரா

பால்மணம்...

பூவிழி தீயாகிக் கொதித்திடும் — புலி
போர்க்களம் ஆடவே குதித்திடும்
தாவியே வேங்கைகள் நடந்திடும் — எங்கள்
தாயகம் நாளையே கிடைத்திடும்

பால்மணம்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| சாந்தன், சியாமளா | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

62

ஏறுதுபார் கொடி ஏறுதுபார்
ஏறுதுபார் கொடி ஏறுதுபார் — இங்கு
ஏறுதுபார் கொடி ஏறுதுபார் — தமிழ்
ஈழத்தின் வேதனை தீர்த்த கொடி
எட்டுத்திக்கிலும் மானத்தைச் சேர்த்தகொடி
காலத்தை வென்றுமே நின்றகொடி — புலி
காட்டிய பாதையில் சென்றகொடி ஏறுதுபார்
செக்க நிறத்திலே வேங்கை நடுவிலே
சீறிடும் கொடியிது — தமிழ்
மக்களைக்காத்த நம்மான மாவீரரை
வாழ்த்திடும் கொடியிது — புலி
வீரத்தின் கொடியிது
மாவீரனின் கொடியிது

எத்தனை எத்தனை வேங்கைகள் ரத்தத்தில்
ஏறிய கொடியிது — பெரும்
சத்திய வேள்வியில் செத்தவர் மீதினில்
சாற்றிய கொடியிது — தமிழ்
ஈழத்தின் கொடியிது — புலி
ஏந்திய கொடியிது
சாதிகள் சண்டைகள் சாய்த்துவிழுத்திய
சாதனைக் கொடியிது — சங்கு
ஊதி முழங்கிட ஊர்மனையாவிலும்
உலவிய கொடியிது — எங்கள்
தாயவள் கொடியிது

ஆயிரமாயிரம் பேரென வேங்கைகள்
ஆக்கிய கொடியிது — பிர
பாகரன் என்றிடும் காவியநாயகன்
போற்றிடும் கொடியிது — தமிழ்த்
தேசத்தின் கொடியிது — எங்கள்
தேசியக் கொடியிது

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| மிதிலா | இரும்பொறை | கண்ணன் |

60

தமிழர் நாட்டு தங்கச்சியே கேளு
உலகம் எங்கும் புரட்சி நடக்கும் நாளு
தமிழர்....

அன்றிலிருந்து நேற்றுவரை
அடிமையாகக் கிடந்தாய்
அல்லலுற்று கரும்புகையில்
நீ கிடந்து மடிந்தாய்
உலகம் தன்னை சாளரத்தின்
ஓரம் நின்று பார்த்தாய்
உனது கண்ணை இதுவரையும்
பழமையிலே தூர்த்தாய் தமிழர்...

தெருவினிலே உரிமைக்காக
உங்கள் தலை நிமிரும்
தேசமெங்கும் இதனைக்கண்டு
வீரமொன்று படரும்
அடக்குமுறை ராணுவங்கள்
அத்தனையும் நடுங்கும்
அறுந்துவிழும் அடிமையான
சங்கிலிகள் அலறும்

புலியின் தங்கை படை நடத்தும்
தங்கத் தமிழ் நாடு
உலக வரலாற்றினிலே
பொன்னெழுத்தாய் ஏடு
வேங்கையுடன் நீயும் சேரு
விரைந்து நீயும் ஓடு
விடிவு கிட்டும் கிட்டுமென்று
குரலெடுத்துப் பாடு தமிழர்....

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| பௌசியன் | ரவி | கண்ணன் |

**61**

பொங்கும் கடலும் பொழியும் நிலவும்
உங்கள் கதை சொல்லும்
எங்கள் மனதில் எழுந்து நிற்கும்
வீரர் கதை சொல்லும்
மா வீரர் கதை சொல்லும் பொங்கும்...

கந்தல் விலக காலை மலர
களத்தில் வீழ்ந்த கதை சொல்லும்
உங்கள் கனவை நனவாய் மாற்ற
உதிர்ந்த வீரர் கதை சொல்லும்
உதிர்ந்த வீரர் கதை சொல்லும்

குந்தில் இருந்து குதர்க்கம் பேசி
குலையும் பெண்கள் நிலை கலைந்தது
இந்த மண்ணை மீட்கும் போரில்
இறந்த பெண்கள் கதை சொல்லும் பொங்கும்...

எங்கள் நாட்டின் இளைஞர் கூட்டம்
வேற்று நாட்டினில் அலைகையிலே
சொந்த மண்ணின் போரில் மடிந்த
மழலை விரர் கதை சொல்லும்
மழலை வீரர் கதை சொல்லும் பொங்கும்...

எங்கும் வெல்லும் தர்மம் போலவே
இங்கு நடந்திடும் போரினிலே
தங்கள் உயிர்களை தாரைவார்த்திட்ட
எங்கள் செல்வர்கள் கதை சொல்லும்
எங்கள் செல்வர்கள் கதை சொல்லும் பொங்கும்...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| சாந்தன் குழுவினர் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

59

தூரம் அதிகமில்லை — இனித்
துயரம் வழியில் இல்லை
நெருப்பில் குளித்த வேங்கைகளே வாருங்கள்
நீண்டதூரமில்லை நடவுங்கள்
கிழக்குவானம் சிவக்கும் நேரம் — தமிழ்
ஈழத்தேசம் விடியும் நேரம்

தூரம்

எதிரியின் பாசறை கொண்டச்சி
எரிந்து கொண்டது தங்கச்சி
பகைவனின் பாசறை கொக்காவில்
பணிந்து கொண்டது நிற்காமல்

குழு;- கோட்டை விழுந்தது
கோட்டை தகர்ந்தது
கோட்டை கொக்காவில், கொண்டச்சி

தூரம்...

கும்புறுமுனையும் களுவாஞ்சி
குடியும் விழுந்தது ஒரு நாளில்
இங்கொரு புதிய யுகம் பூத்து
எழுந்து நிற்குது இந்நாளில்

குழு:- வேங்கை எழுந்தது வேங்கை நிமிர்ந்தது
விடிவெள்ளி அடிவானில் முளைகொள்ளும்

தூரம்...

எங்களின் தலைவன் ஒருபோதும்
இறங்கி வந்தது கிடையாது
சிங்களப் பாசறை தமிழ் ஈழத்
திசைகளில் இருந்திட முடியாது

குழு:- அந்தோ பாசறை அதற்கே தீயிடு
எரியட்டும் முடியட்டும் விடியட்டும்

தூரம்...

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
| --- | --- | --- |
| சாந்தன் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

63

விண்வரும் மேகங்கள் பாடும் — மா
வீரரின் நாமங்கள் கூறும்
கண்வழி கண்ணைகள் பாயும் — இவர்
காவிய நாயகர் ஆகும்
புதைந்த குழியில் இருந்து நீங்கள்
எழுந்து வாருங்கள்
எரிந்த இடத்தில் இருந்து நீங்கள்
நிமிர்ந்து வாருங்கள்

வேங்கைகளாகி விடிவுகள் தேடி
விழுந்த வீரர்களே — தமிழ்
வீடுகள் யாவிலும் விளக்குகளாகி
எரியும் சுடர்களே
இளமைக்கால இனிமைகள் யாவும்
துறந்த வேங்கைகளே — தமிழ்
இனத்துக்காக இறந்து தீயில்
எரிந்த வீரர்களே
எழுந்து வாருங்கள் நிமிர்ந்து வாருங்கள்
எழுந்து வாருங்கள் — நீங்கள்
நிமிர்ந்து வாருங்கள்
தமிழ் ஈழம் மலரும் நேரம் இதுதான்
புரிந்து வாருங்கள்

விண்வரு...

எதிரிகள் வாழி வீடுகள் ஏறி
நடந்த வேங்கைகளே — உயிர்
இழந்தபோது உணர்வுகளோடு
மடிந்த வீரர்களே

காற்றும் நிலவும் பூக்கும் மலரும்
உங்கள் பெயர் சொல்லும் — இனிக்
காலம் யாவும் நீளும் போதும்
உங்கள் பெயர் வெல்லும்
எழுந்து வாருங்கள் — நீங்கள்
நிமிர்ந்து வாருங்கள் — தமிழ்
ஈழம்மலரும் நேரம் இதுதான்
புரிந்து வாருங்கள்

விண்வரு ...

உங்கள் கனவே எங்கள் நினைவாய்
எழுந்து நிற்கின்றோம் — உடல்
ஓடும் குருதி யாவும் சொரியும்
நிலத்தில் நிற்கின்றோம்
தலைவன் வழியில் புலிகள் அணியாய்
நடந்து செல்கின்றோம் — வரும்
தடைகள் யாவும் உடையும் உடையும்
நிமிர்ந்து கொள்கின்றோம்
எழுந்து வாருங்கள் ... ...

விண்வரு —



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| குணமலர் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

64

சிறகுமுளைத்த குருவீ உனக்கு சிறைகளா — தமிழ்
தேசம் எங்கும் பறக்க உனக்குத் தடைகளா
அடுப்பங்கரையில் உறங்கிக்கிடந்து அழுவதா — நீ
அடிமையாகி இன்னும் இன்னும் விழுவதா?

சிறகு...

விழியில் நெருப்பு ஏந்தி — நீ
வெளியில் வருக நீந்தி
வழியில் உள்ள தடைகள் யாவும்
எரிய வருக தாண்டியே

சிறகு...

பேரம் பேசி உன்னைவிற்கும் கோரம் — இது
பிள்ளை பெற்றுக்கொடுப்பதற்கா நேரம்
தாரமென்றும் தாய்மை என்றும் பேசும் — இந்தத்
தடைகள் யாவும் உடைய எழுந்து வாரும்

சிறகு...

புனிதப் போரில் குதித்து நிற்கும் நாடு — பெண்
புலிகள் களத்தில் உலவுகின்றவீடு
குனிந்த தலைகள் நிமிர்ந்து நின்று ஆடு — உன்
குரல்கள் உலகின் மூகடை உடைக்கப்பாடு

சிறகு...

ஆயுதங்கள் எடுத்து நிற்கும் புலிகள் — இவர்
அண்ணன் பிரபாகரனின் பயிர்கள்
ஓயுதல்கள் இனியுனக்கு இல்லை — இதை
உணர்ந்து கொண்டால்
இல்லையுனக்குத் தொல்லை

சிறகு...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| பொன். சுந்தரலிங்கம் | நாவண்ணன் | கண்ணன் |

65

என்னினமே என்சனமே
என்னை உனக்கு தெரிகிறதா?
எனது குரல் புரிகிறதா?

என்னினமே....

மண்ணை இன்னும் நேசிப்பவன் — அதனால்
மரணத்தையே யாசிப்பவன்

என்னினமே...

அன்னை தந்தை எனக்குமுண்டு
அன்பு செய்ய உறவுமுண்டு
என்னை நம்பி உயிர்களுண்டு
ஏக்கம் நெஞ்சில் நிறையஉண்டு — எனினும்
மண்ணை இன்னும் நேசிப்பவன் — அதற்காய்
மரணத்தையே யாசிப்பவன்

என்னினமே...

பாசறை நான் புகுந்த இடம்
பதுங்குகுழி உறங்குமிடம்
தேசநலன் எனது கடன்
தேன் தமிழே எனது திடம் — அதனால்
மண்ணை இன்னும் நேசிப்பவன் — அதற்காய்
மரணத்தையே யாசிப்பவன்

என்னினமே....

என்முடிவில் விடிவிருக்கும்
எதிரிகளின் அழிவிருக்கும்
சந்ததிகள் சிரித்து நிற்க
சரித்திரத்தில் நிறைந்திருப்பேன் — அதனால்
மண்ணை இன்னும் நேசிப்பவன் — அதற்காய்
மரணத்தையே யாசிப்பவன்

என்னினமே...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| பொன். சுந்தரலிங்கம் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

66

வேரோடி மண்ணில் விளைகின்ற பொருளே
விலைபேசி யாரும் விற்காத அமுதே
போராடிப் போராடி பெறுகின்ற உயிரே
புலிவீரர் நெஞ்சத்தில் பொலிகின்ற திருவே

உயிரினும் மேலான தாய்நாடு — இன்று
உடலங்கள் எரிகின்ற பேய்வீடு
பயமின்றி நாம் வாழ்ந்த சிறுகூடு — இன்று
பாதகரால் சிதைந்த மண்மேடு

உயிரினும்...

ஊரெங்கும் அகதியென்று திரிவாயா — இல்லை
உயிரென்ன பெரிதென்று நிமிர்வாயா
போரென்று புலியோடு வருவாயா — இன்னும்
புறம்போக்கும் நிலம்போல இருப்பாயா

உயிரினும்...

சாவுக்குப் பயந்தோடித்திரிவாயா — உந்தன்
தாய்நிலம் அழும்போது சிரிப்பாயா
நாவுக்குப் பதமாகக் கதைப்பாயா — இல்லை
நானொரு புலியென்று வருவாயா

உயிரினும்...

துணிவோடு நீவந்து படைசேரு — புலி
துளியேனும் நிலைமாறிப் போகாது
அணியாகிப் புலியாகிப்போராடு — நீ
அழிவாகிப் போனாலும் வரலாறு

உயிரினும்...

ஒலிப்பதிவு நாகா — இந்த மண் எங்களின் சொந்த மண்

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| பௌசியன் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

67

பாதைகள் வளையாது
பயணங்கள் முடியாது — எங்கள்
பயணங்கள் முடியாது
போகுமிடத்தை சேரும்வரைக்கும்
பாதைகள் வளையாது — எங்கள்
பயணங்கள் முடியாது

பாதைகள்...

பள்ளிநிழலிலே பாடம் படித்திடும்
பத்து வயதினிலே — நாங்கள்
செத்துமடிந்திடும் சென்றியில் நிற்கிறோம்
தேசத்தை காத்திடவே — எங்கள்
பாசத்தை விட்டபின்னே — எனவே
பாதைகள் வளையாது — எங்கள்
பயணங்கள் முடியாது

பாதைகள்...

நாடெலாம் சுடுகாடுகள் போலவே
நாசங்களானதடா — நாங்கள்
நம்பிக்கை வைத்தவர் யாவரும் வெளி
வேசங்களானதடா — இப்போ
மோசங்களானதடா — எனினும்
பாதைகள் வளையாது — எங்கள்
பயணங்கள் முடியாது

பாதைகள்...

திட்டமிட்ட குடியேற்றங்களால் — எங்கள்
தேசம் அழியுதடா — நாங்கள்
தீவிரவாதிகள் என்றுமே சொல்லியே
ரீ வி அலறுதடா
எமக்காரு உதவியடா — எனினும்
பாதைகள் வளையாது — எங்கள்
பயணங்கள் முடியாது

பாதைகள்...

விண்ணைப் பொடிப்பொடி ஆக்கி விழுங்கிடும்
வீரத்தைப் பெற்றவர் நாம் — பிர
பாகரன் என்றிடும் நாமத்தை பெற்றவன்
யாகத்தில் வந்தவர் நாம் — பெரும்
வேகத்தைப் பெற்றவர் நாம் — எனவே
பாதைகள் வளையாது
போகுமிடத்தை சேரும்வரை — எங்கள்
பயணங்கள் முடியாது

பாதைகள்—



| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| மிதிலா | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

## 68

காற்றுக்கும் கை முளைக்கும் தமிழ் ஈழத்திலே
கல்லறையும் மூச்சுவிடும் தமிழ் ஈழத்திலே
நாற்றுப் பயிர்களும் குண்டுகள் வீசும்
நம்பிக்கையோடிங்கு பாட்டுக்கள் பாடும்
ஈழம் மலரும் — தமிழ் ஈழம் மலரும்

காற்றுக்கும்....

நாளை பிறந்திடும் காலை எமக்கொரு
சேதி வழங்கும் இங்கு
நீளக்கிடக்கின்ற ஈழம் எமக்கென
நீதி பிறக்கும்
வாசல் திறக்கும் வேங்கை வந்து சிரிக்கும்

காற்றுக்கும்—

சிந்திவடிந்திடும் எங்களின் ரத்தத்தில்
பூமி சிவக்கும் — புலி
பொங்கி எழுந்திடும் போர்க்களம் யாவிலும்
வெற்றி எடுக்கும்
வேர்கள் துளிர்க்கும் புதுவேளை பிறக்கும்

காற்றுக்கும்—

எங்கு எதிரிகள் பாசறை என்றுமே
வேங்கை நடக்கும் — வெற்றி
சங்கு முழங்கிடும் தாயகப்பூமியில்
சாந்தி பிறக்கும்
வாசல்பிறக்கும் வேங்கை வந்துசிரிக்கும்

காற்றுக்கும்...

மண்ணில் புதைந்த நம் வீரரின் கல்லறை
பூக்கள் மலரும் — எங்கள்
கண்ணில் தெரிந்திடும் தாயவள் மேனியின்
காயம் மறையும்
வேர்கள் துளிர்க்கும் புதுவேளை பிறக்கும்



பாடலாசிரியர்
கந்தராசா

இசை
கண்ணன்

69

செவ்வானம் சிவந்தது ஏன் — அது
செங்கொடியை நினைப்பதற்கே
செங்கொடியின் மத்தியிலே — ஒரு
சிறுத்தை நின்று சிரிப்பதுமேன்

செவ்வானம்...

இமயமலை உச்சியிலே — முன்னர்
ஏற்றி வைத்த கொடியதுபோல்
அமைந்ததெங்கள் புலிக்கொடியே — அதன்பின்
அணிவகுத்து நாம் நடப்போம்

செவ்வானம்...

அந்நியரை நம்பி நின்றால் — நாம்
அல்லலுற வேண்டுமென்றார்
சொன்னவழி தவறியதோ — பட்ட
துன்பமென்றும் மாறியதோ

செவ்வானம்...

அண்ணன் பிரபாகரன் போல் — இங்கு
ஆற்றல் மிகு தலைவனுண்டோ
எண்ணமெல்லாம் இனியுமுண்டோ — புலியுடன்
இளைஞர்கள் நாம் அணிதிரள்வோம்

செவ்வானம்...

வேங்கை வழி சென்றிடுவோம் — இனி
வேறு வழி மறந்திடுவோம்
தூங்குவதில் பயனில்லையே — அண்ணன்
துயர் துடைக்கும் தலைவனன்றோ

செவ்வானம்...

| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
|---|---|---|
| மிதிலா | செ. இராஜநாயகம் | கண்ணன் |

**70**

ஈழமென்ற கொடியிலே
இனிது பூத்த மலர்களே
ஈன்றெடுத்த அன்னையின்
இதயம் பூத்து குலுங்கவே
ஈழ எண்ணம் பாரிலே
வாழ்ந்திடாத போதிலே
இனிது பூத்து மகிழ்ந்திடும்
ஈழமென்ற மலரிது

ஈழமென்ற...

இன்பம் துன்பம் யாவுமே
சூழ்ந்துவிட்ட போதிலும்
இறுதி மூச்சு ஒன்றிலே
ஈழம் காண்பம் என்பமே
இளைஞர் சிந்தும் குருதியில்
நாளை மலரும் ஈழமே
நாளை என்ற பேச்சு ஏன்
இன்று காண்பம் ஈழமே

ஈழமென்ற...

மலருகின்ற ஈழத்தில்
மலரப்போகும் மலர்களே
பூத்துக்குலுங்க் நீங்களே
புன்னகைப்பாள் அன்னையே
பட்ட பாட்டின் பயனுக்கு
பெற்றுவிட்ட பூமியை
ஒன்றுபட்டு ஆளுவோம்
ஒற்றுமையாய் வாழுவோம்

ஈழமென்ற...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| சாந்தன் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

71

இந்த மண் எங்களின் சொந்தமண் — இதன்
எல்லைகள் மீறியார் வந்தவன்
நீர்வளம் உண்டு நிலவளமுண்டு
நிம்மதி ஒன்றுதான் இல்லை

இந்த —

நிலைகள் தளர்ந்து தலைகள் குனிந்து
நின்றது போதும் தமிழா — உந்தன்
கலைகள் அழிந்து கவலை மிகுந்து
கண்டது போதும் தமிழா — வரிப்
புலிகள் எழுந்து புயலைக்கடந்து
போர்க்களம் ஆடுது தமிழா — இன்னும்
உயிரை நினைந்து உடலைச் சுமந்து
ஓடவா போகிறாய் தமிழா

இந்த —

சாவா இலை ஒரு வாழ்வாவெனப் பெரும்
சமரே எழுந்தது தமிழா — உடன்
வா வா புலியுடன் சேர் சேர் எனும்குரல்
வரையைப் பிளக்குது தமிழா — உடன்
ஆகா அழைப்பிது போபோவென ஒரு
மகவை அனுப்பிடு தமிழா — நீ
பூவா இலைப்பெரும் புயலாய் எழுந்துமே
புறப்பட்டு வந்திடு தமிழா
இந்தமண்... ...
இந்தமண் — —

---

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| சாந்தன் குழுவினர் | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

72

எதிரிகளின் பாசறையைத் தேடிப்போகிறோம்
தமிழ் —
ஈழமண்ணை மீட்டெடுக்க ஓடிப்போகிறோம்
கால்வலிக்கும் கைவலிக்கும் ஆறப்போவதில்லை
— எங்கள்
கனவு நனவாகுமட்டும் சோரப்போவதில்லை
குழு:- தூரமதிகமில்லை அந்தோ தெரியுதெதிரி எல்லை
தூரமதிகமில்லை அந்தோ தெரியுதெதிரி எல்லை
எதிரிகளின் —

அழுங்குரல்கள் கேட்கிறதே அகதிமுகாம்
போலும் — அங்கு
அழுங்குழந்தை நாளைவந்து புலிகளுடன் சேரும்
தமிழர் நிலை தொல்லை இது தலைவிதிகள்
இல்லை — இங்கு
தமிழர் எல்லாம் எழுந்துவந்தால்
எதிரி படை இல்லை
குழு:- தூரமதிகமில்லை அந்தோ தெரியுதெதிரி எல்லை
தூரமதிகமில்லை— — —
எதிரிகளின் —

மண்மேடாய் கிடக்கின்ற வீடுகளைப் பாரும்
— இது
முன்னாளில் தமிழர்களின் குடியிருப்பு ஆகும்
வயல்வெளிகள் பாரும் — இது
விளையவில்லைப் பாரும் — இது
தமிழர் நிலம் என்பதனால் விதைக்கவில்லைப்
போலும் ...

குழு:- தூரமதிகமில்லை அந்தோ தெரியுதெதிரி எல்லை
தூரமதிகமில்லை... ...

எதிரிகளின் ...

தலைவன் சொன்ன வேதங் கேட்டு
யாகஞ் செய்கிறோம் — எங்கள்
தலைமுறைக்குள் ஈழம் காண
ஓடிப்போகிறோம்
அண்ணன் பெயர் சொல்லு — உடன்
அணிவகுத்து நில்லு — அந்தோ
அழிக்கவந்த எதிரிமீது
அனலெடுத்துச் செல்லு

குழு:- அனலெடுத்துச் செல்லு
அனலெடுத்துச் ...
அனலெடுத்துச் ...

எதிரிகளின் ...



| *பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை* |
|---|---|---|
| சியாமளா | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

**73**

தூக்கமா கண்மணி பள்ளி எழு — இந்த
தொட்டிலை விட்டு நீ துள்ளி எழு
பூத்த என் பூந்தமிழ் பொற்கொடியே — கையில்
புலிக்கொடி ஏந்தவா பூங்குயிலே

தூக்கமா —

நித்திரைக்காகவா நீ பிறந்தாய் — எந்தன்
நிம்மதிக்காகவா நீ மலர்ந்தாய்
சத்தியப் போரிலே நீ கலந்து — ஒரு
சரித்திரம் படைக்கவே நீ பிறந்தாய்

தூக்கமா —

அப்பன் மடிந்ததும் போர்க்களத்தில் — உந்தன்
அண்ணன் இறந்ததும் போர்க்களத்தில்
கக்கும் அனல் விழியோடெழுவாய் — புலி
காட்டிடும் பாதையில் நீ தவழ்வாய்

தூக்கமா —

சிங்களப் பாசறை நீ கொழுத்து — எதிர்
சேனைகள் யாவையும் நீ விழுத்து
பங்கென நீ புலி படைசேரு — பிர
பாகரன் காட்டிடும் வழியோடு

தூக்கமா ...

பாடியவர் பாடலாசிரியர் இசை
பொன். சுந்தரலிங்கம் புதுவை இரத்தினதுரை கண்ணன்

74

பூபாளம் பாடும் நேரம் — தமிழன்
புலியாகிப் போராடும் காலம்
போராடும் காலம் புலியாகும் நேரம்
பூகம்பம் எழுகின்ற தேசம் — இது
பூகம்பம் எழுகின்ற தேசம்
பூகம்பம் எழுகின்ற தேசம் — இது
பூகம்பம் எழுகின்ற தேசம்

வானத்தில் வெள்ளி முளைக்குது — தமிழன்
வாழ்வினில் வெற்றி பிறக்குது
வெற்றிகள் சூடும் விடிகின்றநேரம்
வேங்கைகள் பாய்கின்ற தேசம் — இது
வேங்கைகள்.......
வேங்கைகள் பாய்கின்ற தேசம் — இது
வேங்கைகள்.........

சாவரும் போதிலும் அஞ்சிடோம் — தமிழ்
ஈழத்தை பெறுமட்டும் துஞ்சிடோம்
போகின்ற பாதை நேரானபாதை—புலிவீரன்
போகின்ற பாதை
பிரபாகரன் போகின்ற பாதை
பிரபாகரன் — ....
பிரபாகரன் ....—
பிரபாகரன் ———

எதிரிகள் பாசறை இங்கடா — இனி
இல்லையென்றே சொல்லிப் பொங்கடா
நெஞ்சினில் பாயும் குண்டுகள் யாவும்
நிச்சயம் வெற்றிகள் சூடும் — புலி
நீண்டதோர் காவியம் ஆகும்
நீண்டதோர் காவியம் ஆகும்
நீண்டதோர் காவியம் ஆகும்
நீண்டதோர் காவியம் ஆகும்

பூபாளம்—

| பாடியவர்கள் | பாடலாசிரியர் | இசை |
| --- | --- | --- |
| சாந்தன். சியாமளா | புதுவை இரத்தினதுரை | கண்ணன் |

75

இரு:- பூமலர்ந்தது கொடியினில் — ஒரு
புலிபிறந்தது மடியினில்

பெ:- ஊரழிந்தது இடையினில் — பெரும்

ஆ:- போரெழுந்தது முடிவினில்

பூமலர்ந்தது—

பெ:- அடிபணிந்திடலாகுமோ — தமிழ்
அரசிழந்திடக்கூடுமோ

ஆ:- புலி இருந்திடும் குகையினில் — இனிப்
புயல் எழுந்திடக் கூடுமோ

பூமலர்ந்தது—

பெ:- நாதியற்றவன் தமிழனா — தமிழ்
ஈழமண்ணிலே விழுவனா

ஆ:- பாதித்தூரங்கள் போனபின் — எம்
பயணம் நின்றிடல் நீதியா

பெ:- அச்சமென்பதும் இல்லையே — எமக்கு
ஆளும் எண்ணமும் இல்லையே

ஆ:- பிச்சை வாங்கியே தின்றுமே — புலி
பேடியாவதுமில்லையே

பெ:- தம்பியென்றொரு அண்ணனாம் — அவன்
தந்த பாலையே உண்டனாம்

ஆ:- தங்க நாட்டிலே பொங்கினோம் — தமிழ்
ஈழம் காணவே போகிறோம்

பூமலர்ந்தது—

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

76

ஓ... வீரனே
எங்கள் மண்ணில் உன் பெயர்
எழுதி வைக்கப்படும்
நீ மடியவில்லையடா
உன் கதை முடியவில்லையடா
ஓ... வீரனே...

விடுதலைப் புலியாய் நீ வாழ்ந்த நாளை
வெடிகுண்டின் நடுவில் நின்ற உன் தோளை
அடி நெஞ்சில் நினைப்பவர்கள்
ஆயிரம் உண்டு
அதோ பார் அவர் கையில் வெடிகுண்டு
நீ மடியவில்லையடா
உன்கதை முடியவில்லையடா
ஓ... வீரனே...

நீ அடைந்த சாவு இங்கே உயிரானது
நீ எறிந்த உயிர்விதை பயிரானது
தீ பிடித்து எதிரிமுகாம் எரிகின்றது
தீரனே உனது முகம் தெரிகின்றது
நீ மடியவில்லையடா
உன்கதை முடியவில்லையடா
ஓ... வீரனே

காலமெல்லாம் புலிக்குகையில்
நீ தங்கினாய்
கண்மூடி இன்று படமாய் தொங்கினாய்
பூமாலை உன் படத்தில் போட்டார் பார்த்தோம்
போட்டவரே நஞ்சு மாலை ஏற்றார் பார்த்தோம்
நீ மடியவில்லையடா
உன்கதை முடியவில்லையடா
ஓ... வீரனே...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசைசெல்லப்பா | காசிஆனந்தன் | தேனிசைசெல்லப்பா |

77

பறக்குதடா யாழ்கோட்டையிலே
எங்கள் புலிக்கொடி
பகைவனிடம் போய்ச் சொல்லுங்கள்
இதுதான் முதலடி
கோட்டை கோட்டையாய்
இனி விழும்
புலிக் கொடி கொடியாய்
நாட்டில் இனி எழும் பறக்குதடா...

கொடிய பகைவர்கள்
நெடுநாள் ஆண்ட — கோட்டையை
நாங்கள் பிடித்தோம்
இடியாய் வெடித்தோம் — கோட்டையில்
இருந்த எதிரிகள்
கதையை முடித்தோம்
கோட்டை கோட்டையாய்...
புலிக்......... பறக்குதடா...

குண்டுகள் வானில் அள்ளிக் கொட்டினாய்
கொடியவனே என்ன கண்டாய்
சண்டையில் பார்த்தோம்
கோட்டையில் உன் உடல் — சரிந்தது
துண்டு துண்டாய்
கோட்டை கோட்டையாய்...
புலிக்...... பறக்குதடா...

எதிரி கோட்டையை மக்கள் படை — இங்கே
இடித்துத் தூளாக்கிப் போடும்
புதிய தமிழீழ மண்ணில் — தமிழனின்
புலிக் கொடி ஒன்றே ஆடும்
கோட்டை கோட்டையாய்...
புலிக் கொடி கொடியாய்... பறக்குதடா...

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசைசெல்லப்பா | காசிஆனந்தன் | தேனிசைசெல்லப்பா |

78

எங்கள் தலைவன் பிரபாகரன் என்று
முழங்கு சங்கே முழங்கு — அவன்
பொங்கி எழுந்தான் பொடிப்பொடியாகி
உடைந்தது பார் கைவிலங்கு

மக்களெல்லாம் மக்களெல்லாம்
பிரபாகரன் பக்கம்
மக்கள் படை என்றைக்கும்
அவன் பக்கம்தான் நிற்கும்

மக்களெல்லாம்—

இளவேங்கை அவன் மலைத் தோள்
தமிழ்வீரம் படைக்கும்
எமை எதிர்ப்போர் முதுகெலும்பை
புலிப்படையும் உடைக்கும்

மக்களெல்லாம்...

அவன் வாழும் காலத்தில்தான்
தமிழீழம் பிறக்கும்
ஆளும் தமிழர் கொடி ஒன்று
உலகத்திலே பறக்கும்

மக்களெல்லாம்...

நம்தலைவன் அவன் பிறந்தான்
விடிவு இனிக்கிடைக்கும்
நாளை இந்த உலகத்திலே — நாம்
நினைத்தது நடக்கும்

மக்களெல்லாம்...

*பாடியவர்* — தேனிசைசெல்லப்பா     *பாடலாசிரியர்* — காசிஆனந்தன்

79

தோழர்களே தோழர்களே
கொஞ்சம் பாரம் தூக்குங்கள் — நீங்கள்
வாழும் தமிழீழம் வாழ — உங்களையும்
புலிகளாக்குங்கள்

தோழர்களே...

பிரபாகரனின் நிழலில்கூட
நெருப்பு இருக்குது
அந்த நெருப்பில் நில்லுங்கள்
உங்களுக்கும் ஒரு பொறுப்பு இருக்குது

தோழர்களே....

நமது தந்தை நமது பாட்டன்
சுமந்த சுமையல்லவா — அந்தத்
தமிழர் வழியிலே புலிகள் இன்று நம்
கண்ணின் இமையல்லவா

தோழர்களே....

*பாடியவர்* *பாடலாசிரியர்*
தேனிசைசெல்லப்பா காசிஆனந்தன்

**80**

வெட்டி வீழ்த்துவோம்
பகையை பகையை பகையை
உன்னை முற்றும் முழுதாக
முழுதாக முழுதாக முழுதாக
உன் வெறித்தனம் பிறகு பலிக்காது
பிறகு தளைக்காது
வெட்டி வீழ்த்துவேம்—

எங்கள் தமிழீழ மண்ணில்
இனியும் நீ எத்தனைகாலம் இருப்பாய்
பொங்கி எழுந்தது பாரடா — எங்கள்
புலிகள் தாயகம் நெருப்பாய்
வெட்டி வீழ்த்துவோம்—

துடித்து துடித்து நாங்கள் கண்ணீர்
தோய்ந்து கண்ணில் அழுவா
பிடித்து பிடித்து நீ சுடவா
பிணமாய் நாங்கள் விழவா
வெட்டி வீழ்த்துவோம்—

அந்த இடத்தில் காலை வைத்தாலும்
இங்கே குண்டுகள் வெடிக்கும்
வந்து பாரடா எங்கள் தாயகம்
வழியில் உன் உயிர் துடிக்கும்
வெட்டி வீழ்த்துவோம்—

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசிஆனந்தன் | தேனிசைசெல்லப்பா |

**81**

கோணமலை எங்கள் கோட்டை — திருக்
கோணமலை எங்கள் கோட்டை
கொடுப்போமா எவன் கையிலும் — இந்த
நாட்டை

கோணமலை எங்கள்...

பழந்தமிழன் குழக்கோட்டன்
அரசாண்ட மண்ணடா
இழந்தால் இந்த மண்ணை — நீ
தமிழனா என்னடா

கோணமலை எங்கள் ..

என் தமிழ் தாயகத்தை
இழப்போமா பல் இழிப்போமா
சொந்தமண் இழந்த பின்னும் — அடா
சோறுண்டு கொழுப்போமா
கொந்தளித் தெழுந்து போராடாமல்
வீட்டிலே குந்திக் கிடந்து நாள் கழிப்போமா

கோணமலை எங்கள் —

தலை நகர் எவன் தொட்டாலும்
தமிழீழம் போர் தொடுக்கும்
தலை தரும் நிலை வந்தாலும் — எங்கள்
தமிழினம் தலை கொடுக்கும்
தலை நகர் வாசலில் — எதிரிகள்
சடலத்தை புலிப்படை எண்ணி
கணக் கெடுக்கும்

கோணமலை எங்கள் ..

பாடியவர் — தேனிசைசெல்லப்பா
பாடலாசிரியர் — காசிஆனந்தன்

82

ஏல ஏலே ஐலசா
ஏலேலேலேலே ஐலசா
மீன் மகள் பாடுகிறாள்
வானிமகள் ஆடுகிறாள்
மட்டுநகர் அழகான மேடையம்மா — இங்கே
எட்டுத் திசையும் கலையின் வாடையம்மா
ஏல ஏலோ ஐலசா...

விபுலானந்தன் பிறந்த வீடம்மா — இது
வீணை கொலு போட்ட நாடம்மா
ஊரூராய் கூத்தாடும்ஊரம்மா — இங்கே
உயிர்வாழும் கலைச் செல்வம் நூறம்மா
மீன்மகள் பாடுகிறாள் —

ஓடிவரும் உப்பாற்று வெள்ளத்திலே — பாடல்
ஒன்றுவரும் தேன் சுமந்து வள்ளத்திலே
பாடிப்பாடி கதிரறுப்பார் கவிகளிலே — எங்கள்
பைந்தமிழும் வந்துவிழும் செவிகளிலே
மீன்மகள் பாடுகிறாள்—

அம்மானை வசந்தன் கேட்கலையா — நீங்கள்
அழகான மகுடி பார்க்கலையா
தேமதுரத் தாலாட்டில் உறங்கலையா — நீங்கள்
தேவியர்கள் வாய்ப் பேச்சில் மயங்கலையா
மீன்மகள் பாடுகிறாள்—

நீர்க்கரையில் வல்லவர்கள் நீச்சலிருக்கும் — எங்கள்
நேரிழையார் வாய்குரவை கூச்சலிருக்கும்
போர்க்கலையில் வல்ல புலிக்கூட்டமும் உண்டு
பகை பொடிப் பொடியாக்கும் போராட்டமும் உண்டு
மீன்மகள் பாடுகிறாள்...

---

பாடியவர் — சுவர்ணலதா
பாடலாசிரியர் — காசிஆனந்தன்

83

தாலாட்டுப் பாடமாட்டேன்
தாலாட்டுப் பாடமாட்டேன்
தமிழீழப் பிள்ளை
என் பிள்ளை — அவன்
தலை சாய்த்து தூங்க
இது நேரமில்லை

தாலாட்டு...

எதிரியின் கொடிய குண்டு வீச்சிலே
தொட்டில் எரிந்தது — என்
பிள்ளை விளையாடும் முற்றத்தில் — நின்ற
பந்தல் சரிந்தது
உறங்கக் கூடாது என்மகன் — என்றொரு
உண்மை புரிந்தது

தாலாட்டு...

விடுதலைப் புலிகள் போராடும் வேளை
மகனே தூங்காதே
வீரமில்லாப்பிள்ளை இவன் என்று
கெட்ட பேரை வாங்காதே
நான் என்ன செய்தேன்
தாய் மண்ணுக்கென்று — நாளை
ஏங்காதே

தாலாட்டு...

தாய் மனம் குளிர பகைவனை என்பிள்ளை
இருகையால் பிழிவான்
தாவி விடுதலைப் புலிகள் கன்னத்தில்
முத்தங்கள் பொழிவான்
விழித்தே இருப்பான் என்பிள்ளை
பகைவன் இருப்பானா அழிவான்

தாலாட்டுப்...

பாடியவர் பாடலாசிரியர்
சுவர்ணலதா காசி ஆனந்தன்

84

தமிழீழம் காக்கும் காவல் அரண்
தலைவன் எங்கள் பிரபாகரன்
காலம் நம் கையில் தந்த ஒளிவிளக்கு — தமிழ்
நாளும் மகிழும் தலைவன் — என்று முழங்கு

தமிழீழம் காக்கும்—

மகளிர் ஆடவர் பேதம் தொலைத்தான்
மங்கையரை களம் வா என்றழைத்தான்
பகைவன் கண்டஞ்சும் படையொன்று படைத்தான்
பாரில் நிகரில்லாதத் தலைவனாய்க் கிடைத்தான்

தமிழீழம் காக்கும்....

தலைவன் அவன் தோற்றம்
புலி போல இருக்கும்
தமிழன் அவன் சீற்றம்
தன்மானம் பெருக்கும்
புலிப்படை தமிழுக்கு
விலங்கினை நொருக்கும்
புத்தம் புது தமிழீழ
அரசு ஒன்று பிறக்கும்

தமிழீழம் காக்கும்—

| பாடியவர் | பாடலாசிரியர் |
|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் |

**85**

விடுதலைப் புலிதங்கச்சி — உன்
வீர எழுச்சி தமிழீழப் புரட்சி

விடுதலைப் புலி...

கொடிய இருள் கிழித்த
ஒளி மின்னல் நெருப்பே
அடிமைப் பெண் விலங்கை உடைத்த
புதிய பெண் பிறப்பே

விடுதலைப் புலி...

பெண்ணைப் பழித்த கொடியவர் — முன்
பெண்ணின் பெருமையை நிலைநாட்டினாய்
மண்ணை அழித்த பகைவனை அழித்து — நீ
மங்கையர் திறன் காட்டினாய்

விடுதலைப் புலி...

போரில் துப்பாக்கி ஏந்தி நீ நடந்தாய்
பூரிப்பில் நெஞ்சு சிலிர்க்கும் — குருதி
நீரில் கிடந்தாய் பார்ப்போம் — புரட்சியின்
நெருப்பினில் நாங்கள் குளிப்போம்

விடுதலைப் புலி...

குழந்தைப் பருவத்தில் கண்முன்னே — அழகு
கொடியாய் நீ வளர்ந்தாய்
இன்று எழுந்தாய் தமிழரின் — எதிரிகள்
தலையில் இடியாய் நீ விழுந்தாய்

விடுதலைப் புலி...

*பாடியவர்* | *பாடலாசிரியர்* | *இசை*
தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா

**86**

குண்டு விழுந்தால் என்ன — வீடு
குலுங்கி இடிந்தால் என்ன உடல்
துண்டு பறந்தால் என்ன நாங்கள்
துடித்து மடிந்தால் என்ன
தமிழீழத் தாகம் தணியாது எங்கள்
தாயகம் யார்க்கும் பணியாது

குண்டு விழுந்தால் என்ன—

பஞ்சம் நெகிழ்ந்தால் என்ன — நாடு
பசியால் மெலிந்தால் என்ன — குழந்தை
பிஞ்சு துடித்தால் என்ன — அது
பிணமாய் விழுந்தால் என்ன

தமிழீழத்தாகம் தணியாது—

உறவைப் பிரிந்தால் என்ன — உள்ள
ஊராய் அலைந்தால் என்ன
பிடித்து சிறையில் அடைத்தால் என்ன
நாங்கள் செத்துத் தொலைந்தால் என்ன

தமிழீழத் தாகம் தணியாது....

| பாடியவர் | பாடலாசிரியர் | இசை |
|---|---|---|
| தேனிசை செல்லப்பா | காசி ஆனந்தன் | தேனிசை செல்லப்பா |

54

பிரபாகரன் நினைத்தது நடக்கும்
அவன் புலிப்படை — நெருப்பாற்றை
நீந்திக் கடக்கும்

பிரபாகரன்...

வரலாற்றில் இது அவன்காலம்
வரிப்புலி எழுந்தால் எழுந்தது ஈழம்

பிரபாகரன் ...

குனிந்த தலைகளை நிமிர்ந்திடவைத்தான்
கும்பிட்ட கைகளில் குண்டைக் கொடுத்தான்
பணிந்த தமிழனை துணிந்தெழ வைத்தான்
பகைவர் என வந்தோர் கதையை முடித்தான்

பிரபாகரன்...

நஞ்சு கழுத்திலே மாலையாய்த் தொங்கும்
நாட்டில் தமிழனால் அமுதமே பொங்கும்
நெஞ்செல்லாம் அவ்வீரன் படையில்தான் — மயங்கும்
நிலமெல்லாம் அவன்தோழை
சுட்டித்தான் இயங்கும்

பிரபாகரன்...

எப்பக்கம் பார்த்தாலும் — அவன்
சுவரொட்டி
எழுந்ததெல்லாம் பேச்செல்லாம்
அவனையே பற்றி
ஒப்பில்லாப் புலிப்படை ஒன்றை திரட்டி
உலா வருகின்றான் அவனுக்கே வெற்றி

பிரபாகரன்...

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 20 | பிறந்திருக்கும் | திறந்திருக்கும் |
| 9 | 3 | முந்தி எங்கள் எந்தை | முந்தைஎங்கள் தந்தை |
| 9 | 12 | வாருங்கோ | வாளுங்கள் |
| 9 | 20 | தோழ் | தோள் |
| 9 | 21 | சோர் | சேரர் |
| 9 | 21 | போரடுக்குமா | போரெடுக்குமா |
| 10 | 10 | குழிக்கும் | குளிக்கும் |
| 14 | 4 | பழந்தமிழரை | பழந்தமிழர் |
| 14 | 11 | நாமிங்கு இன்றோர் | நாமின்றி இங்கோர் |
| 15 | 1 | நடந்த்து | நடந்து |
| 25 | 28 | இனித்தப்பாது | இனியும் தப்பாது |
| 27 | அடிக்குறிப்பு | என்ன நீதி? | அன்னியர் வந்த புகல் என்னநீதி? |
| 28 | 22 | குமரா | குமரர் |
| 29 | 8 | ஏன | ஏன் |
| 30 | அடிக்குறிப்பு | லிப்பதிவு | ஒலிப்பதிவு |
| 31 | 12 | எஙகள் | எங்கள் |
| 32 | 5 | உரைப்பீராகளா? | உரைப்பீர்களா? |
| 33 | 3 | தமிழ்த் | தமிழீழத் |
| 40 | 5 | பேராப் | போர்ப் |
| 40 | 6 | நல்லனார்பாட்டு | நல்லை ஆர்ப்பாட்டம் |
| 40 | 10 | ஓயப்பேரவதில்லை | ஓய்வதில்லை |
| 42 | 4 | ஈழததிலே | ஈழத்திலே |
| 42 | 28 | இன்றுனக்காயிரம | இன்றுனக்காயிரம் |
| 43 | 9 | கூடாதராம | கூடாதாம் |
| 44 | 17 | ஊட்டினாய்— | ஊட்டினாய்—புலி |
| 48 | 5 | — | தென்னங்... |
| 49 | அடிக்குறிப்பு | ஒலிபபதிவு | ஒலிப்பதிவு |
| 53 | 5 | வைத்து | தைத்து |
| 54 | 7 | வெம்பி | விம்மி |
| 54 | 10 | நீழும் | நீளும் |
| 55 | 11 | போரில் | தோளில் |
| 59 | 23 | தமிழன் | தமிழனின் |
| 62 | 4 | சாவு வரும்வரை காத்திருப்பது | மோதி எதிர்த்து மலையாய் இருப்பி - னும் |

| | | சோம்பேறித்தனம் | மூச்சால் உடைக் - கலாம் |
|---|---|---|---|
| 80 | 3 | கண்கைகள் | கங்கைகள் |
| 101 | 2 | பகையை பகையை பகையை | பகையே பகையே பகையே |
| 101 | 14 | கண்ணில | மண்ணில் |
| 101 | 18 | அந்த | எந்த |
| 101 | 21 | துடிக்கும் | குடிக்கும் |
| 102 | 6 | குழக்கோட்டன் | குளக்கோட்டன் |
| 105 | 4 | நாழும் | ஞாலம் |
| 106 | 8 | விடிதலை | விடுதலை |
| 106 | 16 | பார்ப்போம் | பார்த்தோம் |
| 106 | 17 | குழிப்போம் | குழித்தோம் |
| 107 | 8 | நெகிழ்ந்தால் | மிகுந்தால் |
| 107 | 9 | உள்ள | ஊர் |
| 108 | 21 | எழுந்ததெல்லாம் | எழுத்தெல்லாம் |

| பக்கம் | பாடல் | இசையமைத்தவர் |
|---|---|---|
| 100 | 79 | தேனிசை செல்லப்பா |
| 101 | 80 | ,, ,, |
| 103 | 82 | ,, ,, |
| 104 | 83 | ,, ,, |
| 105 | 84 | ,, ,, |
| 106 | 85 | ,, ,, |

| பக்கம் | பிழையான பாடல் இல. | சரியான பாடல் இல. |
|---|---|---|
| 76 | 62 | 59 |
| 79 | 59 | 62 |
| 108 | 54 | 87 |

குண்டு விழுந்தால் என்ன? - வீடு
குலுங்கி இடிந்தால் என்ன? - உடல்
துண்டு பறந்தால் என்ன? நாங்கள்
துடித்து மடிந்தால் என்ன?

தமிழீழத் தாகம் தணியாது-எங்கள்
தாயகம் யார்க்கும் பணியாது.

பஞ்சம் மிகுந்தால் என்ன?- நாடு
பசியால் மெலிந்தால் என்ன?- குழந்தை
பிஞ்சு துடித்தால் என்ன?- அது
பிணமாய் விழுந்தால் என்ன?

தமிழீழத் தாகம் தணியாது-எங்கள்
தாயகம் யார்க்கும் பணியாது.

உறவைப் பிரிந்தால் என்ன?- ஊர்
ஊராய் அலைந்தால் என்ன?- பிடித்து
சிறையில் அடைத்தால் என்ன?- நாங்கள்
செத்துத் தொலைந்தால் என்ன?

தமிழீழத் தாகம் தணியாது-எங்கள்
தாயகம் யார்க்கும் பணியாது.

வெளியீடு: வெளியீட்டுப் பிரிவு
தமிழீழ விடுதலைப் புலிகள்